# புறநானூற்றில் ஐந்து காட்சிகள்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி :: சென்னை

கழக வெளியீடு: ௪௨௧



# புறநானூற்றில் ஐந்து காட்சிகள்

## (ஐந்து நாடகங்கள்)



பூவிருந்தவல்லி, போர்டு
உயர்நிலைப் பள்ளி தமிழாசிரியர்
ஜ. இராஜு முதலியார்
எழுதியது.



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை.

# முகவுரை

பண்டைத் தமிழகத்தைக் காட்டும் பழந்தமிழ் நூல்களிற் புறநானூறே சிறந்த கண்ணாடி. உள்ளத்தைக் கிளர்ச்சியாக்கி வீரத்தை விளைத்து நிமிர்ந்து நடக்கச்செய்யும் அச்செய்யுட்களை ஒவ்வொரு தமிழ் மகனும் படிக்க வேண்டும். புறநானூற்றுக்கண்ணாடியின் வழியாகப் பழந்தமிழரைப் பார்ப்பவன், பார்க்கும்வரையிலாவது அடிமைத்தளையிலே சிக்கி வாழ்விழந்து நிற்குந் தன்னிலையை மறந்து உண்மைத் தமிழனாக இருப்பான்.

'பழமை பாராட்டுவதாற் பயனென்ன?' என்போரும் உளர். அம்மொழி உண்மையே ஆயினும், வீரமும் ஈகையும் நாட்டுப்பற்றும் மேம்பட்ட நம் முன்னோர்களின் வரலாற்றினைப் படிக்குந்தோறும் உண்டாகும் உணர்ச்சி, நரம்புகளிலே ஓடி, குருதியைத் தூய்மைசெய்து, மழுங்கிக் கிடக்கும் தன் மதிப்பைத் தூண்டிவிடாதென்பதற்கு வழியுண்டோ? அவ்வாறு தூண்டாதெனில், வீரர்களைப் பற்றியும் வள்ளல்களைப்பற்றியும் படிப்பதாலும் பேசுவதாலும் அவர்களின் ஓவியங்களைப் பார்ப்பதாலும் உண்டாகும் பயனென்?

தமிழ் மக்களுக்கு வடநாட்டுக் கதைகளான பாரதமும் இராமாயணமுந்தான் தெரியும். தமிழ் நாட்டு முடிமன்னர்களான சேர சோழ பாண்டியர்களின் வரலாறுகளில் ஒன்றேனுந் தெரியாது. பாரி, காரி, ஓரி, அதிகமான், ஆய், நள்ளி, பேகன் எனும் வள்ளல்களைப் பற்றிச் சிறிதும் தமிழர் அறியார்! அவர்களுடைய புகழ்விரும்பாக் கொடைகளை அறியார்! 'விழித்தகண் வேல்கொண்டெறிய அழித்திமைப்பின்' வீரத்துக்கு இழுக்கு என்னும் தமிழர் வீரமெங்கே? இருவர் போர்புரியும்போது மற்றொருவர்

இடையிலே தனியே இருந்து அம்பெய்து ஒருவரை வீழ்த்தும் ஆரியர் வீரமெங்கே? தமிழ் மக்களால் தமிழர் வீரம் அறியப்படாமற் போயினதற்குக் காரணம் நம்நாட்டவரைப்பற்றிய வரலாறுகள் எல்லோரும் அறியும் வண்ணம் எழுதப் பெறாமையேயாம்,

புறநானூற்றுச் செய்யுட்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு காட்சியாக அமைக்கலாம். அவைகளில் ஐந்து காட்சிகளைச் சில வேறு பாட்டுடன் இந்தச் சிறு நூலிலே அமைக்க முயற்சித்திருக்கிறேன். இவை ஒற்றைக்காட்சி நாடகங்களாகப் பள்ளிக்கூடங்களில் நடைபெறும் விழாக்களில் நடிக்கப் பயன்படும். மேலும், வகுப்பிலே துணைப் பாடமாகப் பயிலலாம். இவைகளைப் படிப்பதாலும் நடிப்பதாலும் மாணவர்களின் உள்ளங்கள் செவ்வைப்படவேண்டு மென்பது என் விருப்பம் இந்த விருப்பம் நிறைவேறுமேல் என் முயற்சி பயனுடையதாகும்.

இதற்குமுன், என்னால் எழுதப் பெற்ற இளவரசன் முதற் குலோத்துங்கன் என்னும் நாடகத்தை வெளியிட்டு, ஒற்றைக் காட்சி நாடகங்களும் எழுதித்தர வேண்டுமென ஊக்கி, இதனையும் வெளியிட்ட தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார்க்கு என் நன்றி உரியதாகும்.

பூவிருந்தவல்லி
11—9—46

இங்ஙனம்,
ஆக்கியோன்.

———

## கதைகளின் சுருக்கம்.

---

### 1. கண்டீரக்கோப் பெருநள்ளி

தோட்டி யென்னும் மலையில் ஒரு காட்டுப் பலாமரத்தின் அடியில் வன்பரணர் என்னும் புலவர் அமர்ந்திருக்கிருர். அவர் வறுமையைத் தொலைக்க வழி தெரியாமல் அலைந்துசோர்ந்து அமர்ந்துவிட்டார். வறுமையால் ஒட்டிப் பசியால் சோர்ந்த அவரிடையிலே ஒரு கிழிந்த கரிய ஆடை சூழ்ந்திருந்தது. காலமோ நண்பகல்! பசியின் வெம்மையுங் கதிரின் வெம்மையும் அவரை வெதுப்பி விட்டன,

இந்நிலையிலே ஒரு வேடன் அங்குத் தோன்றினன்; அவர் நிலை கண்டு நெடுமூச்சுவிட்டான்! தான் கொண்டு வந்திருந்த தேனையுந் தினைமாவையும் அவருக் களித்துப் பசி தீர உண்பித்தான். பசியகல உணர்வுற்ற அப்புலவர் அந்த வேடனை உள்ளங் குளிர வாழ்த்தினர். ஆனால், அவ்வேடன் பசிதீர உணவளித்தல் யாவருக்குங் கடனென்று கூறிப் புகழ்ச்சி வேண்டாமென்ருன். மேலும், விலையுயர்ந்த முத்துமாலை யொன்றையும் பொன்னுலான தொடி யொன்றையும் அளித்துச் சென்ருன். அவன் தன்னை யாரென அறிவிக்கவும் மறுத்தான்.

அவன் சென்றவுடனே மற்ருெரு வேடன் வந்தான். அவன் வாயிலாக முன் வந்த வேடன் 'கண்டீரக்கோப் பெரு நள்ளி' என அறிந்த புலவரின் வியப்பு எல்லை கடந்தது. புகழ்ச்சியை விரும்பாத நள்ளியின் புகழைப் புவி முழுதும் பரப்பினர் அப்பெரும் புலவர்!

இந்தக் காட்சிக்கும் பற்றுக் கோடாக இருந்த புற நானூற்றுச் செய்யுட்கள்: 148, 149, 150 இவை மூன்றும் வன்பரணர் நள்ளியைப் பாடியவை. ஔவையார் பாடிய 187-ஆம் பொதுச் செய்யுளும் உதவியது.

## 2. அருளுள்ளம் I, II

உறையூரிலே சோழன் நெடுங்கிள்ளி தன் அவையிலே அமைதியின்றி உலாவிக்கொண்டிருந்தான். எதிரிலே கோவூர் கிழார் என்னும் புலவர் ஓர் இருக்கையிலே அமர்ந் திருந்தார். நெடுங்கிள்ளியின் நெஞ்சம் நினைவினாலே குமுறுகிறது! பகைவனான நலங்கிள்ளி உறையூரை முற் றுகை செய்துவிட்டான். முன்னொரு முறை ஆவூரை முற்றுகை செய்தான் அப்பகைவன். போரின் கொடுமைக் கஞ்சிய நெடுங்கிள்ளி கோவூர் கிழாரின் மொழிக்கு மாறு சொல்லாமல், மதிலைத் திறந்து நலங்கிள்ளியிடம் ஒப்பு வித்தான். அவ்வாறு செய்ததன் விளைவென்ன? இப் போது உறையூரையும் அவன் முற்றுகையிட்டதே! வீரத் தின் உறைவிடமான நெடுங்கிள்ளியின் உள்ளம் இப் போது விட்டுக் கொடுக்க விரும்ப வில்லை. அவன் ஆணைப் படி. போர் முயற்சி நடந்துகொண்டிருக்கிறது. ஆனால், அவன் அளவற்ற வீரர்களின் ஆவி துடித்துத் துடித்துப் பிரியுங் காட்சியிலே ஒன்றிக் கலங்கினான்!

கோவூர் கிழார் இம்முறையும் போரைத் தடுக்கவே விரும்பினார். ஒரு குடிப் பிறந்த அரசரிருவரும் போர் புரிந்து புன்மையடைவதை ஒப்பவில்லை அவர் உள்ளம். எனினும், இப்போதும் எப்படித் தடுப்பது நெடுங்கிள் ளியை என்று புரியாமல் ஏக்க முற்றார்.

இந்நிலையிலே படைத் தலைவரும் அமைச்சரும் வந்து போர்முயற்சி செவ்வனே முடிந்திருப்பதை அறிவித்துக் கொண்டனர். ஆகவே, போர்த்தெய்வம் தன் வாயைத்

திறந்து நாவை நீட்டி அச்சுறுத்தி வருவதைக் கண்டு புலவர் கலங்கினர்.

அதன் கொடிய தோற்றத்தைக் கண்டு செயலற்றிருக்கும்போது மற்றொரு கொடிய காட்சியையுங் கண்டார். இளந்தத்தர் என்னும் புலவரை நலங்கிள்ளியின் ஒற்றனென்று வீரரிருவர் பிணித்துக் கொண்டு வந்தனர்! அறிவின் ஒளி வீசும் அமைதி நிரம்பிய இளந்தத்தரின் தோற்றத்தைக் கண்ட கோவூர் கிழார் அரசனிடம் புலவர்களின் பெருந்தன்மையை எடுத்துக் கூறிக் கொலைத் தண்டனை யின்றிப் புலவரை விடுதலை செய்வித்தார்.

இறுதியில், போர்த்தெய்வம் ஏமாந்தது! விடுதலை பெற்ற இளந்தத்தரும் கோவூர் கிழாரும் ஒரு குடிப் பிறந்த இரு சோழர்களையும் போர் செய்யா வண்ணம் அறிவுரை கூறித்தடுத்தனர். நலங்கிள்ளி முற்றுகை விட்டு நீங்கினன். நெடுங்கிள்ளி புலவரிருவரையும் போற்றினன்.

தாமப்பல் கண்ணன் என்பவன் ஓர் அந்தணன். அவனுக்கும் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானுக்கும் நட்புண்டு. இருவருங் கவருட்டத்திலே கை தேர்ந்தவர்கள். எனினும் மாவளத்தானே மற்றவனை விடத் தேர்ச்சி பெற்றவன்.

உறையூர் முற்றுகை பற்றி யிருவரும் உரையாடிக் கொண்டே கவருடத் தொடங்கினர். மாவளத்தான் ஒவ்வோராட்டத்திலும் வெற்றியுற்றான். தாமப்பல் கண்ணனுக்கும் வெற்றியிலே ஆவல் பிறந்தது! அந்த ஆவல் அடாத பொய்யாட்டத்திலே உள்ளத்தைத் திருப்பியது; பொய்யாட்டமும் ஆடினன். இதைக் கண்ட மாவளத்தான் சினந்து வட்டை வீசித் தரையிலடித்தான். ஆனால், அது தெரித்துக் கண்ணன் முகத்திலடித்தது. அடியின் நோய் பொறுமல், 'சோழர் இது செய்யார் நீ செய்து விட்டாய் உன் பிறப்பிலே ஐயமுளது எனப் பழித்தான்!

சினந்தணிந்த மாவளத்தான் தன்னை அவன் பழித்ததை நினையாமல், தன்னை மன்னிக்க வேண்டுமென நாணத்துடன் வேண்டினான்! என்னே பெருந்தன்மை! உணர்வு பெற்றான் கண்ணன்! தன் இழிசெயலையும் மாவளத்தானுடைய உயர் செயலையும் எண்ணி வெட்கினான்! மன்னிப்பும் வேண்டினான்!

இருவரும் கவறாடுதலின் இழிவை அறிந்தனர். இக் காட்சிகளுக்குத் துணைபுரிந்த புறநானூற்றுச் செய்யுட்கள் கோவூர் கிழார் பாடியவை 44, 45, 47; தாமப்பல் கண்ணன் பாடியது: 43.

## 3. முரசு கட்டில்

சேரமான் தகடுரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறையின் அரண்மனையிலே ஒரு கூடத்திலே மோசுகீரனார் என்னும் புலவர் உலாவிக் கொண்டிருக்கிறார். அவருடைய காட்சியிலே திகைப் பிருந்தது. தம்முடைய வறிய கோலத்திற்கும் அந்த அழகிய செல்வச் சிறப்பு மிளிர்கின்ற கூடத்திற்கும் பொருத்தமில்லையென அறிந்து வெட்கமுற்றார். அப்போதுதான் இதுவரை யுண்டிராத அறுசுவை யுண்டியை ஆர அமர உண்டார். அவ்வுணவின் சுவையிலே மெய்ம்மறந்த அவருக்கு மேலும் திகைப்பை யுண்டாக்கியது அக்கூடம்! அதன் அழகிலே விழிகளைப் பறிகொடுத்த அவர் அக்கூடத்திற்கும் அழகைத் தந்த ஒரு கட்டிலைக் கண்டார். அது பொன்மயமானது மலர்களைப் பரப்பி அணி செயப்பெற்றது. கந்தைப் பாயிலே கட்டாந் தரையிலே சிந்தையாரத் துயிலும் அவருக்கு எண்ணெய் நுரை தெளித்தது போல் மலர்களைப் பரப்பிய மெத்தென்ற அணையிலே துயில வேண்டுமெனக் காதலுண்டாகியது; படுத்துறங்கி விட்டார்.

சிறிது போது கழித்துக் காவலாளிகளிருவர் அங்கே வந்தனர். கட்டிலிலே புலவர் துயில்வதைக் கண்டு நடுக்கம்

கொண்டனர்; ஓடினர்; அரசரிடம்கூறினர் தாம்கண்டதை. அரசரும் விரைந்து வந்தார்! அக் கட்டிலிலே ஒருவர் துயில் வதைக் கண்டார்! சீற்றங்கொண்டார்! இதுவரையில் அக் கட்டிலிலே ஒருவரும் படுத்திலர்! படுப்பதென்ன அமரவும் கூடாதே! அது வீர முரசு வைத்து வீரர்கள் வழிபடும் கட்டிலாயிற்றே! ஒருவரும் அதைத் தொடவும் ஒண்ணுது. அக் கட்டிலில் அமருவோர் ஆயுள் அப்பொழுதே அகற்றப் படவேண்டுமென்பது அரசராணை! ஆகையாலே தான் அரசர் அவ்வாறு அழன்ருர் எனினும், நெருங்கி நோக்கிய வுடன் சீற்றஞ் சிதைந்தது. அதுமட்டுமோ, அருகிலிருந்த கவரியை எடுத்துத் தம் முழவுத் தோள் பூரிக்கும்படி வீசினுர் அப் புலவருக்கு; என்னே அவருடைய தமிழ்க் காதல்!

தம் பின்னே வந்து திகைத்து நிற்கும் காவல் வீரர்களில் ஒருவனிடம் அந்தக் கவரியை கொடுத்து வீசச் செய்தார். மற்ருெருவனை நீராடச் சென்றிருந்த வீர முரசு வந்தவுடன் அருகிலிருக்குங் கூடத்திலே அதை வைக்கச் சொன்னுர். பிறகு கூடத்தை விட்டு வெளியே சென்ருர்.

புலவர் விழித்தார்; தமக்குக் கவரி வீசும் வீரனைப் பார்த்து நாணமுற்ருர் 'எனக்கேன் இந்தப் பணி?' என்று தடுத்தார் அவனிடம் பேசியதால் அக் கட்டிலின் வரலாற்றை அறிந்து நடுங்கினுர்; எழுந்துநின்ருர். அப்போது அரசரும் வந்தார்; தம் பிழையைப் பொறுக்க வேண்டினுர்! மேலும் தமக்கு மன்னர்பிரான் கவரிகொண்டு வீசியதன் நோக்கமறியாமல் திகைப்பதையும் செப்பினுர். அரசரோ தமிழ்ப்புலவருக்குத் தாம் செய்யும் சிறப்புத்தான் அது என விளம்பி, அவரைத் தம் அருகிலே அமர்த்தி பொன் மணிப் பணிகளாலும் நன்மதிப்புற்ற ஆடைகளாலும்அணிவித்தார். அச்சேரர் பெருமானுடைய தமிழ்க் காதலை நமக்கறிவிப்பது அப் புலவர் பெருமான் பாடிய புறநானூற்றிலுள்ள 50-வது செய்யுளாகும்.

## 4. கவரிமான்

சோழன் செங்கணானும் சேரமான் கணைக்காலிரும் பொறையும் செய்தபோரிலே சேரன் சிறைப்பட்டான்; உறையூரிலே குடவாயிற் கோட்டச் சிறைச் சாலையிலே சிறைப்படுத்தப்பட்டான். தன்நிலையை எண்ணி எண்ணி மனம் புழுங்கிய அவனுக்கு நீர்வேட்கை யுண்டாகியது. காவலனை விளித்தான். காவலர்களில் ஒருவன் செல்வர்களின் செருக்குக்குச் சிந்தை நைகிறவன். மற்றொருவன் ஊழ்வினையே வறுமைக்குக் காரணமென அமைந்தவன் இருவரும் சொற்போரி (வாதம்) ட்டுக்கொண்டிருந்தார். சேரனுடைய விளிக்குச் செவிகொடுக்கவில்லை; கேட்டுங் கேளாதவர்போல் இகழ்ந்திருந்தனர். பன்முறை கூப்பிட்டுக் கேட்டபிறகு ஒருவன் சென்று நீர் கொணர்ந்துகொடுத்தான். மற்றவன் சிறைப்பட்ட பிறகும் அரசனென்ற செருக்கு அகலவில்லையா? அரைக் காசுக்குப் போன மானம் ஆயிரம்பொன் கொடுப்பினும் வருமா? என இடித்துரைத்தான்.

அவனுடைய இடிப்பினாலே தன் மதிப்புணர்ச்சியுற்ற சேரமான் மற்றொருவன் கொணர்ந்த நீரைக் கீழே ஊற்றி விட்டுத் தன்னுருயிரை நீத்தான். அப்போது அவன் கூறிய தாகப் புறநானூற்றிலே காணப்படுவது 74-ஆஞ் செய்யுளாகும். அதுவே இக் காட்சிக்குப் பற்றுக்கோடு. (ஆதரவு)

## 5. பெருநற் கிள்ளி

சோழன் போர்வைக்கோப் பெருநற் கிள்ளி என்னும் வீரனும் முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனும் செய்த அச்சமூட்டும் மற்போரிலே மல்லனைச் சோழன் வீழ்த்திச் சோழ மக்களின் நன்மதிப்பைப் பெற்றான். அன்று மாலையிலே பெருநற்கிள்ளி தன் காதலி நக்கண்ணையை அவள் வீட்டுத் தோட்டத்திலே காணச் சென்றான்.

நக்கண்ணை பெருங்கோழி நாய்கன் என்பவனுடைய மகள் கல்வியறிவு நிறைந்த புலவர் பெருமாட்டி! அழகிற்

சிறந்த ஆரணங்கு! அவளைக் காதலித்ததனாலேயே தன் தந்தை தித்தனால் வெளியேற்றப்பட்டான் நம் கிள்ளி! அறுசுவை உண்டியை அரண்மனையிலே பொற்கிண்ணங்களிலே உண்ட அவன் புல்லரிசிக் கஞ்சியை வறியருடன் அருந்திக் களித்தான். காதலின் விளைவினால் மல்லனுடன் தான் செய்த போரிற் கிடைத்த வெற்றியை அவள் தன் காதற் கண்களாற் கண்டு மகிழ்ந்ததை அவள் கூறக் கேட்க விழைந்தான்.

குறிப்பிட்ட நேரம்வரையிற் காத்தான். மேலும் காத்திருந்தான்! வழிமேல் விழிவைத்திருந்ததைத் தவிர மற்றுப் பயனொன்றும் பெற்றிலன். மாலை விடை பெற்றது இருளும் வந்தது. மான்விழியாள் வரவில்லை. ஆகவே, 'வறுங்களம் நாடி உண்மறுகி'ச் சென்றான் 'தாதையும் வெறுத்தார்! காதலியும் வெறுத்தாள் வாழ்வினி எதற்கு?' எனமயங்கினான். அவன் நண்பர் சாத்தந்தை என்னும் புலவர் அவனைக் கண்டார். அவரும் அவன் போரைக் கண்டு வியந்து கொண்டாடினவர். ஆகவே, அவனைக் கண்டு வாழ்த்தவே வந்தார். வந்தவர் அவன் ஆற்றலை வியந்து கூறி அவன் மனவாட்டத்தை அறிந்து மாற்ற முயன்றார்.

மறு நாள்மாலையும் நக்கண்ணையை நாடி இருவருஞ் சென்றனர். அங்கே கிடைத்த பனை மடல்களிலே நக்கண்ணை வரைந்திருந்த செய்யுட்களினால் அவள் தன் மேல் வைத்திருந்த காதல் மாறவில்லை யென்பதை அறிந்து மகிழ்ந்தான் கிள்ளி. நக்கண்ணையும் வந்தாள் தித்தன் பெருநற்கிள்ளியின் வீரந்ததும்பும் போராற்றலுக்கு மகிழ்ந்து, நக்கண்ணையை மணக்கவும் அரண்மனைக்கு வரவும் ஒப்புக்கொண்டதை அவள் வழியாகவே உணர்ந்த கிள்ளி, அம்முயற்சியும் நக்கண்ணையினுடையதென்றறிந்து பெருமகிழ்ச்சி கொண்டான். இக் காட்சிக்குத் துணை புரிந்த புறநானூற்றுச் செய்யுட்கள் சாத்தந்தையார் பாடிய 80 ஆஞ் செய்யுள். பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணை பாடிய 83, 84, 85-ஆஞ் செய்யுட்கள்.

## காட்சி உறுப்பினர்கள்.

### முதற் காட்சி

1. கண்டீரக் கோப் பெருநள்ளி: கடையெழு வள்ளல்களில் ஒருவன்; தோட்டி மலைத் தலைவன்.
2. வன்பரணர்: ஒரு புலவர்.
3. வேடன்: நள்ளியின் வேலைக்காரன்,

### இரண்டாங் காட்சி

1. நெடுங்கிள்ளி: உறையூரில் அரசாண்ட சோழன்.
2. நலங்கிள்ளி: நெடுங்கிள்ளியின் தாயாதி.
3. கோவூர்கிழார்: ஒரு புலவர்; நெடுங்கிள்ளியின் நண்பர்.
4. இளந்தத்தர்: ஒரு புலவர்: நலங்கிள்ளியின் நண்பர்
5. மாவளத்தான்: நலங்கிள்ளியின் தம்பி
6. தாமப்பல்கண்ணன்: ஓர் அந்தணன் மாவளத்தானுக்கு நண்பன்.

மற்றும் அமைச்சர், படைத்தலைவர் ஆகியோர்.

### மூன்றாங் காட்சி

1. சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை: சேர அரசன்.
2. மோசுகீரனார்: ஒரு புலவர்.

மற்றும் இரு காவலர்கள்.

### நான்காங் காட்சி

1. சேரமான் கணைக்கால் இரும்பொறை: சேர அரசன். சோழன் செங்கணானால் உறையூரிற்சிறைப்படுத்தப்பட்டவன்.

மற்றும் இரு காவலர்கள்.

### ஐந்தாங் காட்சி

1. போர்வைக் கோப் பெருநற்கிள்ளி- தித்தன் என்னும் சோழ அரசன் மகன்.
2. சாத்தந்தை: ஒரு புலவர்; பெருநற்கிள்ளியின் நண்பர்.
3. நக்கண்ணை: பெருங்கோழி நாய்கன் மகள்; பெருநற்கிள்ளியின் காதலி.

உ

முருகன் துணை

# புறநானூற்றில் ஐந்துகாட்சிகள்

## காட்சி: 1

## கண்டீரக் கோப் பெரு நள்ளி

**காலம்:** நடுப்பகல்.

**இடம்:** தோட்டி யென்னும் மலை.

[காட்டுப் பலாமரத்தின் அடியில் வன்பரணர் என்னும் புலவர் அமர்ந்திருக்கிறார். வறுமையால் வாடி மெலிந்த உடம்பு; பல ஒட்டுகள் இட்டுத் தைத்த கிழிந்த ஆடை.]

**வன்பரணர்:** (தமக்குத் தாமே) ஊழ்வினையின் கொடுமை உரைப்பதற்கும் முடியாதது! கதிரவனுடைய கொடிய வெம்மைக் கதிர்கள் உடம்பைத் தாக்குகின்றன! உள்ளத்தை வறுமை வாட்டுகிறது! உடம்பின் வெப்பத்தைப் போக்க இந்தக் குளிர்ந்த நீரூற்றிலே குளித்தேன்; இம்மர நிழலிலே தங்கினேன். இவ்வாறே வறுமையின் வெப்பத்தைத் தணிக்கும் வகையை யறியாது திகைக்கிறேன்! இம்மலையின் தலைவராகிய கண்டீரக்கோப் பெருநள்ளியின் இருப்பிடத்தைக் காட்டுவார் யார்? அவர் பெரிய வள்ளலெனக் கேள்வி. ஆ! என்ன புழுக்கம்! (வியர்வையைத் துடைக்கிறார்) காலையில் எழுந்து வந்

தேன். கால்களிரண்டும் இனி நடக்க முடியா தெனக் கைவிட்டன! உடம்பும் ஓய்வை விரும்பு கிறது. எனினும், வந்த நோக்கம் நிறைவேற வில்லை. எவ்வாறு வழி காட்டாமல் இக்காடு மலைப்பை யுண்டாக்குகிறதோ, அவ்வாறே உள்ள மும் பொருளுக்கு வழி காட்டாமல் வருத்து கிறதே! (கண்டீரக்கோப் பெருநள்ளி மரத்தின் ஒரு புறத்தில் மறைவாக வந்து நிற்கிறார். முடியிலே மயிலிறகும் நீலமணியும், இடையிலே புலித்தோலும், கழுத்திலே முத்து மாலையும், தோளிலே வில்லும் அம்பறாத்தூணியும், ஒரு பையும், கையிலே தேக்கிலை யில் தேனும் உடையவரா யிருக்கிறார். வெயிலில் அலைந்து களைத்துக் காணப்படுகிறார். அவர் வந்ததை வன்பரணர் அறியார். நள்ளியும் பேச்சின்றிப் புல வரை நோக்கி அவர் கூறுவதைக் கேட்கிறார்.)

வன்பரணர்: (மேலும் தமக்குத்தாமே) வழிமேல் விழி வைத்து மனைவியும் மழலைச் சிறுவரும் வாடி நிற் பார்! அந்தோ! பசி என்னும் பகைவனாலே படுந் தொல்லை என் பகைவனுக்கும் வேண்டாம்! கற்ற கல்வி எங்கே? உற்ற அறிவு எங்கே? மதிப்பு எங் கே? சுற்றமெங்கே? மற்றெதுதான் எங்கே? புல்ல ரைப் புகழ்ந்தேன்! போவெனப் புறத்தே தள்ளி னர்! நாணமும் கோணலாயிற்று! (கண்ணீர் வரு கிறது நள்ளியும் கண்ணீர் விடுகிறார்) வன்பரணா! என்னே உன் வாழ்வு! மற்றவர்க்குச் சிறிதும் உதவ வகையிலாய்! சுற்றத்தாரும் நண்பர்களும் சூழ இருக்க உண்ணும் உயர்நிலையிலாய்! எனி னும், உன்னையாவது காத்துக்கொள்ள முடியுமா? முடியாது! முடியாது!! பிறருதவியாலேதான்

வயிற்றை வளர்க்கிருய்! பிறர்க்குச் சுமை! (பெருமூச்சு விடுகிருர். ஆடையைப் பார்க்கிருர். நகைப்பு வருகிறது) குளிர் காலத்திலே காணப் படும் பருந்தினிறகுபோல் உள்ளது! இப்படி யேனும் இவ்வுடலைச் சுமப்பதுதான் எதற்கு? உயிர்விடல் இனிது! (மரத்திலே சாய்கிருர்) உயிர் விட்டால் என் பைங்குதலைச் சிறுவர்களும் மனை வியும் என்னுவர்? அவர்களும் இரப்பதா? இரப் பது எனக்கே யிருக்கட்டும். (கைகூப்பி) இறைவா! வறுமையைக் கடக்க வழி காட் டாயா? (நள்ளி வன்பரணரெதிரில் வந்து நிற்கிருர். அவருடைய அச்சமுண்டாக்கும் தோற்றத்தைக் கண்ட வன்பரணர் நடுங்கி எழுந்து நிற்கிருர்.)

நள்ளி: (கைகூப்பி) வணக்கம் ஐயா! ஏன் எழுந்தீர் கள்? அமருங்கள்.

வன்பரணர்: (கைகூப்பி) வணக்கம். (அமர்கிருர். நள் ளியும் அமர்கிருர்.)

நள்ளி: அந்தோ! எங்கிருந்து வருகிறீர்களோ? பசி யால் மெலிந்து விட்டீர்களே! (தேன் தொன்னை யைக் கீழேவைக்கிருர். பையிலிருந்து தினைமாவை வாரி ஒரு தேக்கிலையிலே வைக்கிருர்.) மிகவும் தாழ்ந்த உணவிது! எனினும் பசியைத் தணிக்கப் பற்றுமென்று நினைக்கிறேன். அருள் செய்து உண்ணுங்கள்.

வன்பரணர்: இதுவா தாழ்ந்த உணவு. (தேனைத் தினை மாவிலே கலந்து உண்கிருர்) உணவில்லா விட்டால் உடம்பில்லை யென்பதை உணர்ந்தேன் இன்றே. இப்பெரும் பசியைப் போக்கவந்த உம்மை இறைவன் இனிதே காப்பாராக.

நள்ளி: (இரக்கத்துடன்) எப்போது உண்டீர்களோ? ஆற அமர நன்றாக உண்ணுங்கள். (பையிலிருந்து மேலும் மாவை வாரி வைக்கிறார்.)

வன்பரணர்; (கையால் தடுத்து) போதும்! போதும்!! வயிறு இடமில்லை யென மறுக்கிறது! இரு வேளைக்கும் ஏற்றுக்கொள்ளுமோ இவ்வயிறு? (கையைக் கழுவிக்கொண்டு நீர் பருகுகிறார்) தாங்கள் உண்டீர்களோ? என் பசியைமட்டும் பார்த்துக்கொண்டேன்! வறியனாலே உலகுக்கு வரும் நன்மை என்ன?

நள்ளி: (பெருமூச்சு விட்டு) வறுமையும் உலகில் இருக்கிறதே மக்களை வாட்ட! நான் முன்பே உண்டேன். இம்மர நிழலிலே இளைப்பாறவே வந்தேன். ஒவ்வொரு நாளும் இந்த நிழலிலே இளைப்பாறுவேன்.

வன்பரணர்; (மரத்தையும் நிழலையும் நீரூற்றையும் சுற்றுப்புறத்தையும் நோக்குகிறார்) ஆம்! இது நல்ல நிழல்! பக்கத்திலேயும் நல்ல நீரோடை! நல்ல இனிய காட்சி! எனினும், நல்லவராகிய தங்கள் நிழலும், நீர்மையும், காட்சியுமே என்னை யின்புறுத்தின. தாங்கள் வருமுன் இக்காட்சி என் உணர்வுக்கு எட்டவேயில்லை. பசிப் பகைவன் மறைத்து விட்டான். அப்பகைவனை ஓட்டிய தங்களை யாரென்று அறியலாமா?

நள்ளி: (நகைத்து) ஏன்! என்னைத் தெரியவில்லையா? இப்பரந்த உலகிலே ஒரு அணுவே நான்.

வன்பரணர்; என்ன! ஓர் அணுவா? மலையைவிடப் பெரியீர் தாங்கள்!

நள்ளி: (நகைத்து) நல்லது! அணுவை மலையாக்கும் வகையை அறிவீர்களோ?

வன்பரணர்: உள்ளதைத்தானே உரைக்கிறேன். உண வின்றிச் சோர்வுற்றேன். வறுமை நெறியிலே ஏங்கி நடந்தேன். தாங்கள் இனிய தேனை யூட்டி உணவளித்து வறுமையைக் கடக்க வழிகாட்டி னீர்கள். தாங்கள் செய்த நன்மை கடலினும் பெரிது! உலகினும் பெரிது!! வானத்தினும் பெரிது!!! தாங்கள் மட்டும் எப்படி அணுவா வீர்கள்?

நள்ளி: (நாணத்துடன்) போதும்! போதும்!! எவ் வளவோ மக்கள் இவ்வுலகிலே உள்ளனர். அவர் களிலே நானும் ஒருவன். எங்ஙனம் யான் மட்டும் உயர்ந்தவனாவேன்? (பரிவுடன்) அறிவுச் செல்வராகிய தாங்கள் இந்தக் கிழிந்த ஆடை யையோ அணிவது? என்ன உலகம்? (கழுத்தி லிருந்த ஓர் முத்து மாலையையும் தோளில் அணிந் திருந்த தொடி ஒன்றையும் கழற்றி அளித்து) இவற் றைக் கொண்டு நல்ல ஆடைகளை வாங்கி அணிந்து கொள்ளுங்கள்.

வன்பரணர்: (வாங்கிக்கொண்டு) எப்படி நன்றி கூறு வேன் எளியேன்?

நள்ளி: எதற்கு நன்றி? உண்மையில் நன்றிக்கு உரிய வர் தாங்களே! என்னால் இயன்ற கடமையைச் செய்து இன்புறும்படி செய்தீர்கள்?

வன்பரணர்: (வியப்புடன்) நல்லது! பொல்லாத வறுமையினாலே புன்மை அடைந்த எளியே னுடைய இடரைப் போக்கினீர்கள்! இந்த மாலை யுந் தொடியும் என் வறுமை மாலையை மாற்றி

விட்டன. இனி என்னுடைய நாவானது சிறியோர்களைப் பெரியோர்களாக அமைத்துப் பாடாவண்ணம் செய்தீர்கள். ஒருவர் செய்யாத செயலையெல்லாம் செய்தார்களெனப் பொய்கூருமல் பெருநெறி காட்டினீர்கள்! என் உறவினர் இனிமேல் காலையிலே செவ்வழியென்னும் பண்ணையும் மாலையிலே மருதமென்னும் பண்ணையும் பாடிக்கொண்டு செல்வர்கள் மனைதோறும் செல்வதை மறந்துவிடுவார்கள். பசிக்கொடுங்கோலன் ஆட்சி இனியென்னைப் படராது. இவ்வாறு பெருங்கொடையளித்த பெருமானாகிய தங்களைப் பாடுவது எம்போன்ற புலவர்களின் இயற்கை. ஆதலின்......

நள்ளி: (வருத்தத்துடன்) என்னை வறுமையின் கொடுமை! ஐயா! தாங்கள் அடைந்த துன்பத்தைக் கேட்கக் கேட்க என் உள்ளம் உருகுகிறது. தாங்களிடம் ஒரு குறையிருக்கிறது. அதாவது...

வன்பரணர்: நன்றி கூற முடியாத நிலை.

நள்ளி: அன்று! கடமையைப் புன்மை செய்வது! தாங்கள் என்னைப் பாடவேண்டும், புகழவேண்டுமென்ற எண்ணம் எனக்கில்லை. கொடிய பசியும் அப்பசியை மடியவைக்கும் உணவும் யாவர்க்கும் பொது. ஒருவன் பசியால் மெலியும்போது ஒருவன் உணவை வீணே வைத்திருத்தல் மிகப் பெரிய தீய நெறியாகும். மணி முடியணிந்த மன்னவனுக்கும் கிழிந்த துணியுடை யணிந்த வறியனுக்கும் பசியுண்டு. அப்பசியை மாற்றுவது யாவர்க்கும் கடமையாகும். அதற்கு நன்றியை விரும்புதல் பேதைமை.

**வன்பரணர் :** *உள்ளத்திலே ஒளியை உண்டாக்கும் உயர்ந்த உண்மையைக் கேட்டேன். உணவினும் வள்ளலானீர்கள்! அறிவினும் வள்ளலானீர்கள்!*

**நள்ளி :** *அழகா இந்த மொழி? இறைவ ஒனருவனே வள்ளல். இறைவன் மக்களாகிய நம்முள் ஒரு வன் வள்ளலும் ஒருவன் இரவலனுமாவது இல்லை. நம்மை வள்ளலென நவில்வது இறைவனையே இழிவு படுத்துவதாகும்.*

**வன்பரணர் :** *(வியந்து) இதுவரையில் இவ்வுண்மைகளை எவரும் உரைத்திலர்!*

**பெருநள்ளி :** *(எழுந்து கைகூப்பி) வணக்கம். சென்று வருகிறேன்.*

**வன்பரணர் :** *(எழுந்து கைகூப்பி) சென்று வாருங்கள்.*

**பெருநள்ளி :** *விரும்பிய போது இம்மர நிழலுக்கு வாருங்கள். ஒவ்வொரு நாளும் இங்கு வருவேன். (செல்கிறார்)*

**வன்பரணர் :** *(அவரையே நோக்கி நின்று) வேடர்களெல்லாம் விலங்கினை வதைப்பர்! இவ்வேடரோ என் வறுமையை வதைத்தார்! மடமையையும் வதைத்தார்! தோற்றம் கொடியது! பேச்சோ இனியது! இயற்கையின் முரணை யிங்கே கண்டேன். (ஒரு வேடன் வருகிறான்) யாரோ வருகிறார்! இவரும் வேடரோ?*

**வேடன் :** *(கைகூப்பி) வணக்கம் பெரியீர்!*

**வன்பரணர் :** *(கைகூப்பி) வணக்கம் ஐயா!*

**வேடன் :** *நீலமணியும் மயிலிறகும் அணிந்த ஒருவர் இங்கே வந்தனரோ?*

**வன்பரணர் :** *ஆம்; அவர் யார்?*

வேடன்: காட்டிலே வாழுங் கடியவேடுவர் அவர்! காட்டுமே தோற்றமே? (தன் கையிலிருந்த மான் தோலை அளித்து) இது தங்களைப் போன்ற பெரியோர்களுக்கே ஏற்றது.

வன்பரணர்: என்ன காண்கிறேன்? வழிமறித்துப் பொருள் பறிக்கும் வாழ்க்கையர் வேடரென மடமையேன் எண்ணினேன்! இம்மலையின் வேடர்களோ வள்ளல்களாக வுள்ளனர்!

வேடன்: (புன்முறுவலுடன்) வழிமறித்தல் எம் வாழ்க்கை நெறியன்று. இங்குவந்த எங்கள் இறைவர் ஆணையின் வண்ணம் எவர்க்குந் துணை புரிதலே எங்கள் நோக்கம்.

வன்பரணர்: தங்கள் இறைவரை யாரென இதுவரையிற் கூறவில்லையே!

வேடன்: இம்மலையின் இறைவர் அவர். அவர் வடிவம் அன்பு! உள்ளம் அன்பு! செயலும் அன்பு! அவராலேயே நாங்கள் திருந்தினேம். அன்பினாலேயே எங்களை அவர் ஆள்கிறார். எவ்வழிச் சென்றாரவர்?

வன்பரணர்: (ஒரு பக்கங் காட்டி) இவ்வழிச் சென்றார். அன்பரே! அப் பெரியார் என் பசியைப் போக்கினர் தேனாலும் தினைமாவாலும். உயர்ந்த இந்தப் பணிகளாலே வறுமையைப் போக்கினர். அவரைப் பாட வேண்டுமென என் உள்ளம் விரும்புகிறது. நன்றியைக் காட்ட வேறு வழி நன்கு அறியேன். அவர்தம் பெயரையும் ஊரையும் உரைக்காமலே போய்விட்டார். தாங்கள் அறிவித்தால் என்னைத் தெளிவுபடுத்தின நன்மை தங்களைச் சாரும்.

வேடன். அதைக் கூறுதல் என் கடமையை மீறுவதாகும். எனினும், கூறுகிறேன். அவரே கண்டீரக்கோப் பெருநள்ளி! (சென்றுவிடுகிறான்)

வன்பரணர்: (தமக்குத் தாமே) என்ன வியப்பு! பெருவள்ளலாகிய கண்டீரக் கோப் பெருநள்ளியா இவர்? இவரை நாடியே யெளியேன் போந்தேன். வழியிலேயே கண்டேன். கேட்டதை விடக் கண்டதே சிறப்பாகவுள்ளதே இவர் தன்மை!......நீர் நிறைந்ததை நன்னிலம் (நன்செய்) என்கிறார்கள்! நீர்வளமில்லாததைப் புன்னிலம் (புன்செய்) என்கிறார்கள். அது பொய்! மேடாயினு மென்ன? பள்ளமாயினு மென்ன? நாடாயினுமென்ன? காடாயினுமென்ன? எங்கே நல்லார் உளரோ, அங்கே உள்ளதே நன்னிலமென்பதை அறிந்தேன்!"......வள்ளல் புகழை மாநிலமெங்கும் வளமுறப் பரப்புவேன்!...... பொருளை விரும்பிப் பாடுதல் புன்மைதான். செய்ந்நன்றி யறிதலாற் சிறப்பித்துப் பாடுதல் சிறப்பே ஆகும்......வறுமையே! நீண்டநாள் நெடுந்துணையாய் நிழல் போலத் தொடர்ந்தாய். இனிமேல் என்னைத் தொடரமாட்டாய். என்னுடன் பழகிய நீ என் நன்மதியைக் கேள்! சற்றும் மறவாமல் நினைவிலே வை. கற்றார் பக்கம் சற்றும் வாராதே! வள்ளல்களையும் மெள்ள நெருங்காதே! பிறர்க்கிரங்கும் பெரியாரைச் சாராதே. ......என்ன கூறுகிறேன்! என் பகைவருக்கும் உன் நட்பு வேண்டாம்! எங்கள் நாட்டை, தமிழ்நாட்டை—விட்டு வெளியே ஓடிவிடு. உனக்குத் துணையாக என் புன்மதியையும் கூட்டி அனுப்பியுள்ளேன். (செல்கிறார்)

## காட்சி: 2

## அருள் உள்ளம்

இடம்: உறையூரில் நெடுங்கிள்ளியின் அவை.
காலம்: மாலை.

[ நெடுங்கிள்ளி உள்ளம் அமைதியின்றி உலாவுகிறார். கோவூர் கிழார் இருக்கையில் அமர்ந்திருக்கிறார் ]

**கோவூர் கிழார்:** அரசே! எவ்வளவு நேரம் இப்படி உலாவிக் கொண்டேயிருப்பீர்கள்? அரியணையில் அமர்ந்து என் மொழியைக் கேளுங்கள். போரென்பது.

**நெடுங் கிள்ளி:** (உலாவிக் கொண்டே) போரென்பது ஒரு பேய். அது மண்ணாசையாய் வந்து மன்னர் களை வதைக்கிறது! இந்தக் கொடியன் நலங் கிள்ளி முன்னர் ஆவூர் முற்றுகை யிட்டபோது (பல்லைக் கடிக்கிறார்)

**கோவூர் கிழார்:** அதைத்தான் நினைக்க வேண்டு கிறேன். அப்போது, வெளியிலிருந்து பொருள் வர வழியின்றி மக்கள் அடைந்த துன்பத்தை நினைத்துப் பாருங்கள். மாதரின் கூந்தல்கள் மல ரைக் காணவில்லை. களிறுகள் கட்டுத் தறியிலே துதிக்கையைச் சேர்த்துக் கொண்டு நின்று பசி யினாலே சோர்வுற்று இடிபோல் பிளிறிய காட்சி என் கண் முன்னே நிற்கிறது! வெறு நீரையுண்டு மக்கள் எத்துணை நாள் வருந்தினர்! அன்னைய ரிடம் பாலில்லாததால் அருமைக் குழவிகள் அலறின!

**நெடுங் கிள்ளி:** (நின்று பெருமூச் செறிந்து) போதும் அந்த நிலையை நினைவுக்குக் கொண்டு வராதீர்

கள்! போர்க்கெனத் திரும்பிய வுள்ளங் கலங்கு கிறது! அப்போதுதான் தாங்கள் கூறியதற் கிணங்கி ஆவூரைத் திறந்து அவனிடத்திலே ஒப் படைத்தேனே! (உலாவிக் கொண்டே) போரிலே மக்கள் உயிரிழப்பதை நான் இப்போதும் விரும் பிலேன்.

**கோவூர் கிழார்:** போரில் மடியும் வீரர்களின் குடும்பம் தலைவர்களை யிழந்து வாடும். காதலனை யிழந்த காதலிகளின் கண்ணீரும், தந்தையையிழந்த சிறு வர்களின் வருத்தமும், மைந்தனை யிழந்த பெற் ரோர்களின் மனக்கலக்கமும் எண்ண எண்ண...

**நெடுங்கிள்ளி:** என் மன வுறுதியை மாய்க்காதீர்! படைவீரர் போரில்லை யெனப் புழுங்குகின்றனர். வீரமில்லாதவனென என்னைக் குடிகள் வெறுக் கின்றனர்!

**கோவூர் கிழார்:** மக்களோடு மக்கள் போரிட்டு மாள் வது மிகப் பெரிய கொடுமை! விலங்குகளின் செயல்! மக்கள் விலங்கு மனத்தினை விட்டு மெய் யறிவு பெறும் நாள் என்றோ? எப்போதும் போர்! போர்!! போர்!!! உள்ளத்திலே யினிய கலையுணர்ச்சி யுண்டாவதெப்படி? அன்பு நெறி சுரப்பது எப்படி?

**நெடுங்கிள்ளி:** குருதி வெறி பிடித்த வுள்ளத்திலே யினிய கலை எப்படி ஊறும்? அதற்கு இடம் இல்லையே! பிறவுயிரைத் துடிக்கத்துடிக்கப் பிளந் தெறிவதிலேதான் இன்பம் அவர்களுக்கு! தலை யிழந்த உடல்கள் தத்தித் தத்தி யாடும்போது தாளம் போட்டு வேடிக்கை பார்ப்பதிலேதான் விளைந்திடும் இன்பம் அவர்களுக்கு! உயிரை

வளர்க்கும் கலையுணர்ச்சியிலே கருத்தூன்றுவார்களா? என் உள்ளத்திலே வீரமில்லையா? உடலிலே வலிமை யில்லையா? உயிர்க்கொலையெனில் உள்ளந் துடிக்கிறது!...

கோவூர் கிழார்: கொல்லாமையை வளர்ப்போம். நாடெங்கும் அருளொளியைப் பரப்புவோம்.

நெடுங்கிள்ளி: எனினும், இக் கொடியன் போருக்கென முற்றுகையிட்டு அறை கூவுவதை எப்படிப் பொறுப்பேன்? புறக்கணிப்பேன்? (வாயிற்காவலன்வந்து வணங்கி நிற்கிறான்) என்ன வேண்டும்?

காவலன்: அரசர் பெருமான் வாழ்க! அமைச்சரும் படைத்தலைவரும் வந்திருக்கின்றனர்.

நெடுங்கிள்ளி: வரச் சொல் (காவலன் வணங்கிச் செல்கிறான். நெடுங்கிள்ளி அரியணையில் அமர்கிறார்)

கோவூர் கிழார்: நான் வெளியே செல்லலாமா?

நெடுங்கிள்ளி: ஏன்? செல்ல வேண்டாம். தாங்கள் இருப்பதால் தவறு ஒன்றுமில்லை. (அமைச்சரும் படைத் தலைவரும் வந்து வணங்குகிறார்கள். அரசர் கையால் அமரும்படிக் குறிப்பிடுகிறார். அவர்களும் தங்களுக் கேற்ற இருக்கையில் அமர்கின்றனர்.) அமைச்சரே! என்ன முடிவுக்கு வந்தீர்கள்?

அமைச்சர்: போர் செய்வது தான் பொருத்தம்.

நெடுங்கிள்ளி: (எண்ணத்துடன்) ஏன்?

அமைச்சர்: வந்த போரை விடுவது வீரமுமாகாது! நெறியுமாகாது. துறவிக்கு வேண்டிய உளப்பான்மை நமக்குத் தகாது.

நெடுங்கிள்ளி: (புன் முறுவலுடன் படைத் தலைவர் பக்கந் திரும்பி) படைத்திறம் எப்படி?

**படைத்தலைவர்:** ஒவ்வொரு வீரனும் போரெனும் முழக்கங் கேட்டவுடன் புறப்படத் துடிக்கிறான்; உயிரைக் காட்டினும் நாடே சிறந்தது என்று உறுதி பூண்டுளான்! நாடெங்கும் வீரக்கனல் கொந்தளித்து அலை வீசி ஆரவாரம் செய்கிறது!

**நெடுங் கிள்ளி:** (இரக்கத்துடன்) என்னே வீர ரியல்பு! படைக் கருவிகளின் படைப்பு எப்படி?

**படைத் தலைவர்:** நூற்றுக் கணக்கான உலைக்களங்கள் படைக் கருவிகளைப் போர் போராகக் குவிக்கின்றன; இராப் பகலின்றி வேலை செய்கின்றன. (காவலன் வர)

**நெடுங் கிள்ளி:** எங்கு வந்தாய்?

**காவலன்:** (வணங்கி) இரண்டு வீரர்கள் ஒருவரைப் பிணித்துக் கொண்டு வந்துள்ளனர்.

**நெடுங் கிள்ளி:** வர விடு (காவலன்வணங்கிச்செல்கிறான்) வீரர்களின் போர் பயிற்சி?

**படைத் தலைவர்:** மிக நன்றாகப் பயின்றுள்ளனர். (இரு வீரர்களும் பிணிக்கப்பட்டவரை அழைத்து வருகின்றனர்)

**நெடுங் கிள்ளி:** (உற்று நோக்கி) இவர் யார்?

**ஒரு வீரன்:** (வணங்கி) போர்ப் பயிற்சிக் கூடத்திலே இந்த ஆள் பூனை போலப் பதுங்கிப் பதுங்கி வந்து நின்றார். ஒற்றரென ஐயப்பட்டுப் பிடித்து வந்தோம்.

**நெடுங் கிள்ளி:** முதலில் இவருடைய கட்டை அவிழுங்கள். முகத்திலே அறிவின் ஒளி வீசுகிறது (வீரர்கள் கட்டை அவிழ்க்கிறார்கள்) யாரையா நீர்?

**வந்தவர்:** அரசே! நான் ஓர் புலவன்; சோழர் நலங் கிள்ளியிடமிருந்து வந்தேன்; ஆனால், ஒற்றனல்

2537



லேன். அமைச்சர்: நலங்கிள்ளியிட மிருந்தா? (வியப்படைதல்)

நெடுங் கிள்ளி: (அமைதியாக) எங்கு வந்தீர்?

வந்தவர்: உறையூரைப் பார்க்க வந்தேன்.

நெடுங் கிள்ளி: அமைச்சரே! என்ன உம் எண்ணம்?

அமைச்சர்: இப்போது உள்ள சூழ்நிலையிலிருந்து ஒற்றரென்று நான் உறுதி செய்ய வேண்டும்.

நெடுங் கிள்ளி: ஆம்; அப்படித்தான் எண்ண வேண்டியிருக்கிறது. ஆனால், அவ்வாறு இல்லாமலிருக்கலாகாதா? (பெருமூச்சு விட்டு) ஒற்றருக்குத் தண்டனை என்ன?

அமைச்சர்: கொலைத் தண்டனைதான்.

நெடுங்கிள்ளி; (வந்தவரைப் பார்த்து) நீர் ஒற்றரல்லரென்பதற்குச் சான்று உண்டா?

வந்தவர்: நான் கூறுவது உண்மை. ஆனால், உங்கள் ஐயத்தை எப்படி அகற்றுவேன்?

நெடுங்கிள்ளி: அதாவது உம்மை ஒற்றரென நாங்கள் முடிவு செய்வதை மாற்ற முடியாது என்கிறீர்!

வந்தவர்; ஆம்.

நெடுங்கிள்ளி: உம்மை அறிந்தவர்கள் இந் நகரில் உளரோ?

வந்தவர்: இலர்.

நெடுங்கிள்ளி: ஆகவே, என் மனச் சான்றுக்கு மாறாக முதல் முதலாக உமக்குக் கொலைத் தண்டனை விதிக்கிறேன்.

கோவூர் கிழார்: (துடிப்புடன்) அரசே! ஒரு வேண்டுகோள்.

நெடுங்கிள்ளி: என்ன?

கோவூர்கிழார்: ஒரு ஒற்றர் தாம் நலங்கிள்ளியிட மிருந்து வருவதாகத் தாமே உரைப்பாரா?

நெடுங்கிள்ளி: (எண்ணத்துடன்) ஆம், உரையார்.

கோவூர்கிழார்: தம்மை அவர் ஒற்றரல்லரென்றும் புலவ ரென்றும் உரைப்பது உண்மையாக இருக்க வேண்டும் என நினைக்கிறேன்.

நெடுங்கிள்ளி: புலவர் ஒற்றராக இரரரா?

கோவூர் கிழார்: (எழுந்து) ஒரு நாளும் புலவர்கள் ஒற்றராக வரமாட்டார்கள்.

நெடுங்கிள்ளி: (நகைத்து) அப்படியா?

கோவூர் கிழார்: (வருத்தத்துடன்) என்ன நகைக்கிறீர் கள்? புலவர்களைப் பற்றித் தாங்கள் இதுவரை ஒன்றும் அறியவில்லை போலும்; புலவர்கள் பரி சிலாலாயே வாழ்கின்றார்கள், நீண்ட வழியென் றும் காடென்றும் பாராமற் கொடையாளிகளை தேடிச் செல்கிறார்கள். தாங்கள் கற்ற கல்விக் கேற்பத் தமது திருந்தாத நாவினால் அறிந்தவாறு அவர்களைப் புகழ்கிறார்கள். கிடைப்பதை மன அமைதியுடன் பெற்றுச் செல்கிறார்கள்; சுற்றத் துக்குங் கொடுத்துத் தாமும் உண்கிறார்கள்; நாளைக்கு வேண்டுமென வைக்கும் வழக்கமு மில்லை. எனினும், பிறர்க்குக் கேடு செய்யக் கனவிலுங் கருதார்கள். உள்ளத்தி லொன்று வெளியே ஒன்றாக நடக்க அவர்கட்கு இயலாது. ஆகையால், இவர்களை ஒற்றர்களென உரைப்ப தெப்படி? மேலும், தாங்கள் புவியரசராக இருப் பதைப் போல இவர்கள் புலமையரசராக இருக் கிறார்கள். எனவே, செம்மன முடைய இவர் களை ஒற்றரென உரைத்தல் ஒன்னாது.

**நெடுங்கிள்ளி:** (நன்றியறிதலுடன்) உண்மையே பாம்பின் கால் பாம்பறியும் என்பதை இன்று கண்டேன். இவரை விடுதலை செய்கிறேன். (வீரர்கள் புலவரை கட்டவிழ்த்து விடுகின்றனர். புலவர் அரசரையும் கோவூர் கிழாரையும் வணங்குகிறார். கோவூர் கிழார் புலவரைத் தழுவிக் கொள்கிறார்.) புலவரே கோவூர் கிழார் அருகில் அமரும்.

**புலவர்:** (அமர்ந்து) காலனிலை என்னை ஒற்றனென நினைக்க வேண்டி யிருப்பினும் கோவூர் கிழாரால் உயிர் தப்பினேன். அவருக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?

**கோவூர் கிழார்:** (அன்புடன்) தங்கள் பெயரென்ன?

**புலவர்:** இளந்தத்தன்.

**கோவூர் கிழார்:** (எழுந்துபுலவரைத் தழுவிக் கொண்டு) ஆகா மிகப் பெரிய நல்லிசைப் புலவரான தங்களைக் காணும் பேறுபெற்றேன். (அரசரை நோக்கி) இவர் புகழ் எல்லாப் புலவர்களின் உள்ளத்திலும் நின்று ஒளி வீசுகிறது. இவரை நேரில் இதுவரை காணாமல் இருந்த குறை நீங்கியது.

**இளந்தத்தர்:** அடியேனும் தங்களை வணங்க வேண்டுமென நீண்ட நாளாக எண்ணியிருந்தேன். இன்றே அப்பேறு பெற்றேன். மேலும், என் உயிரை மீட்டீர்கள்.

**நெடுங்கிள்ளி:** என்ன இனிய காட்சி! புலவர்களே, அமருங்கள். எங்களைப் போல் மண்ணாசையால் சூழப்படாமையால், ஒருவரை யொருவர் அன்புடன் அறிமுகம் செய்து கொள்கிறீர்கள். ஒருவருயிரை ஒருவர் காக்க முற்படுகிறீர்கள். (வருத்

தத்துடன்) நாங்களோ ஒருவரை யொருவர் அழிக்க முற்படுகிறோம். (கோவூர் கிழாரும் புலவரும் அமர்கிறார்கள்.) என்னே அரசர் அழிவியல்.

**கோவூர் கிழார் :** அரசர் பெருமான் வாழ்க! நீண்ட நேரமாக என் உள்ளத்திலே ஊறிக் கிடந்த ஒன்றை வெளியிட விரும்புகிறேன்.

**நெடுங் கிள்ளி :** என்ன அது?

**கோவூர் கிழார் :** தாங்களும் அமைச்சரும் படைத்தலைவரும் கருத வேண்டும் இதை.

**நெடுங் கிள்ளி :** கூறுங்கள்.

**கோவூர் கிழார் :** தாங்களும் புலிக்கொடி யுடையீர். நலங் கிள்ளியும் புலிக்கொடி யுடையார். இருவரும் சோழர் குடியில் பிறந்தவர்களே. உங்களில் எவர் தோற்றாலும் சோழர் குடியே தோற்றதாகும். இருவரும் வெல்வதும் இயலாது. ஆதலின் போராற் சோழர் குடிக்கு இழிவே. ஒரு குடியிலே பிறந்த நீங்கள் போரிடுவது சேரனுக்கும் பாண்டியனுக்கும் வலிமையை உண்டாக்கும். உங்கள் ஒற்றுமைக் குறைவை அவர்கள் பயன்படுத்திக் கொண்டு எளிதில் உங்களை வென்று விடுவார்கள்.

**நெடுங் கிள்ளி :** உண்மையே: என்ன அறிவில்லாத போர். எனினும், புலவரே! தாங்கள் கூறிய உண்மையை நலங்கிள்ளி மட்டும் அறியாதது என்ன? போரைத் தடுக்க நான் அவனிடம் உறையூரை ஒப்புவிக்கும் ஒன்று தானா வழி? (மனத்துயருடன்) எப்படிப் போரைத் தடுப்பேன்? மக்களுக்கு மானம் என ஒன்று இருக்கிறதே.

**இளந்தத்தர் :** (எழுந்து) அரசர் பெருமான் வாழ்க.

என் உயிரை அளித்தீர்கள். அதற்குக் கைம்மாருக, நலங்கிள்ளியிடம் புலவர்பெருமான் கோவூர்கிழாருடன் சென்று அறிவூட்டி எப்படியாவது போரை நிறுத்தி விடுகிறேன். தங்களுடைய அருளுள்ளம் விரும்பிய நன்னெறி அவருக்கு வாராதது வியப்பே.

நெடுங்கிள்ளி : எவ்வாருவது போரை நிறுத்துங்கள். ஆனால், நான் போர் செய்ய விரும்பாததற்குக் காரணம் உயிர்க் கொலைக்கு அஞ்சியே அன்றிக் கோழைத் தன்மையா லன்று என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும்.

கோவூர் கிழார் : (நன்றி யறிதலுடன்) தங்கள் அருளுள்ளத்திற்கு வணங்குகிறேன். இதோ நாங்கள் செல்கிறோம்.

நெடுங்கிள்ளி : நன்று, சென்று வாருங்கள். (இருவரும் செல்லுதல்.) படைத்தலைவர் இவர்களின் முயற்சியை அறியும் வரையிற் போர் முயற்சியை நிறுத்த வேண்டும்.

படைத்தலைவர் : (எழுந்து) ஆணைப்படி நடக்கிறேன்!

## இரண்டாங் காட்சியின் தொடர்ச்சி

இடம் : நலங்கிள்ளி தம்பி மாவளத்தான் அரண்மனை.

காலம் : நண்பகல்.

[சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும் தாமப்பல் கண்ணனும் எதிரெதிராய் அமர்ந்துள்ளனர். இடையிலே சூதாடு கருவிகள் வைக்கப் பெற்றுள்ளன.]

கண்ணன் : (சலிப்புடன்) சோழநாட்டு மறக்குடி மக்களெல்லாரும் அறக்குடிகளாய் விட்டனர் இப்போது.

மாவளத்தான் : (களிப்புடன்) மறந்தேய அறம் வளர்தல் மாண்புடையதே.

கண்ணன் : (நகைத்து) வீரம் வளர்ந்த உள்ளத்திலே அச்சம் நடன மிட்டுக் களிக்கும்.

மாவளத்தான் : மிகவும் நல்ல வாழ்த்தே. ஏன் இப்போது இப்பேச்செழுந்தது. எந்தக்கோழையைக் கண்டீர்?

கண்ணன் : ஆவூர் முற்றுகை ஏன் கைவிடப்பட்டது?

மாவளத்தான் : அருளுள்ளத்தால் கைவிடப்பட்டது.

கண்ணன் : யாருடைய அருளுள்ளத்தால் ?

மாவளத்தான் : கொடுமை யறியாத நெடுங்கிள்ளியின் குழைந்த அருளுள்ளத்தால். ஒருவனுடைய உணர்ச்சிக்காக எண்ணற்ற ஏழைகளின் இரத்தத்தைச் சிந்த எண்ணாத பேரருளாளர் அவர்.

கண்ணன் : அப்படியானால் ஓர் அரசன் தன் நாட்டுக்கு வரும் அல்லல்களைப் போக்காமல் விடுவதும் அருளுளந்தானே ?

மாவளத்தான் : ஆவூருக்கு வந்த அல்ல லென்ன ?

கண்ணன் : பகைவன் வலிதிலே ஆவூரைக் கைப்பற்ற வந்தான்.

மாவளத்தான் : தன்னைப் போன்ற ஓர் அரசன் கையில் ஒப்பித்தல் தாழ்வோ ?

கண்ணன் : இடங்கொடுத்தால் மடம்போய்விடாதா?

மாவளத்தான் : எப்போதும் இடங் கொடுக்க முடியுமா ?

கண்ணன் : அப்படித்தானே நேர்ந்தது! இப்போது மறு முறையும் இடங் கொடுத்தார் நெடுங்கிள்ளி.

மாவளத்தான் : உறையூர் முற்றுகையையா உரைக்கிறீர்?

கண்ணன் : ஆம்! அம் முற்றுகை தான்!

மாவளத்தான் : அது என்ன ஆயிற்று?

கண்ணன் : முற்றுகை உடைந்தது.

மாவளத்தான் : ஏன்?

கண்ணன் : மதிலின் அகத்திலுள்ளோர் மூலையில் அவிந்து கிடந்ததால் முற்றுகை உடைந்தது.

மாவளத்தான் : உமக்கு ஒன்றுமே தெரியாது. மதிலின் உள்ளே யிருந்தோரின் போர் முயற்சியை அறிவேன். தம் நிலையினின்றும் பெயராத பெருங் கடலைப் போன்றவர் நெடுங்கிள்ளி எனினும், போருக்கு வெளியே வந்தால் ஒருவரும் எதிர் நிற்க மாட்டார்கள். நலங் கிள்ளியின் பேராசையை நோக்கி நகைத்திருந்தார் என்றே கூறலாம். எப்படிப் போர் நின்றது? வேறு காரணம் இருக்க வேண்டும்!

கண்ணன் : (நகைப்புடன்) கோவூர் கிழாரின் கூற்றுலேயும் நின்றது!

மாவளத்தான் : அப்படிக் கூறுங்கள். என்ன கூறினர்?

கண்ணன் : ஒரே குடியிற் பிறந்தோர் போரிடுவதால் குடிக்குக் குறையெனக் கூறினர்.

மாவளத்தான் : எப்படி?

கண்ணன்: யார் தோற்ருலும், தோற்றது சோழர்குடியாம்!

மாவளத்தான்: பொன்மொழி!(மகிழ்ச்சியுடன்)மேலும் ஏதாவதுண்டோ?

கண்ணன் : பகைவர்களுக்கு வலிமிகுமாம்!

மாவளத்தான் : பார்த்திரா! அறிவுடையோர் நட்பு அல்லலை அகற்றுகிறது! பாவம்! ஏமாந்தது

போர்த் தெய்வம்! இனிமேல், பகைசயற்ற வெறு வாயை மெல்ல வேண்டியதுதான்! என் வழி யிலே இவ்வுலகம் வந்தால் இனி யெப்போதும் போரே புகாது! போகட்டும் அந்தத் தீமைப் போர்; ஆகட்டும் இந்தச் சூதுப்போர்!

கண்ணன் : அப்படியே. (இருவரும் சூதாடுகிறார்கள்)

மாவளத்தான் : பொழுதை நன்றாகப் போக்கச் சூதாட்டம் ஒன்றே பொருத்தமான விளையாட்டு! இதிலே உண்டாகும் இன்பத்திற் கெல்லையேயில்லை! மேலும் நாம் கூறிய பணயமே விழுந்தால் எவ்வளவு இன்ப முண்டாகுந் தெரியுமா? இதோ பாரும் ஆறு விழுகிறது! (சூதாடு கருவியை உருட்டுகிறான். ஆறு விழுகிறது)

கண்ணன் : எனக்குமட்டும் விழாதா என்ன? இதோ பாரும் பன்னிரண்டு! (உருட்டுகிறான்; விழவில்லை)

மாவளத்தான் : இதோ பாரும் ஈரிரண்டு! (விழுகிறது)

கண்ணன் : இதோ பன்னிரண்டு மறுபடியும் (திருட்டுத்தனமாக உருட்டுகிறான்; விழுகிறது)

மாவளத்தான் : (சினத்துடன் கருவியைக் கையிலெடுத்துக்கொண்டு) பொய்யாட்டம்! திருட்டாட்டம்! (கருவியை வீசித் தரையி லடிக்கிறான். அது தெரித்துத் தாமப்பல் கண்ணனுடைய முகத்திலடிக்கிறது)

கண்ணன் : (அடிபட்ட இடத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டு சினத்துடன் எழுந்து) சீ! சோழர் மரபிற் பிறந்தோர் செய்வதா இது? இவ்வளவு காலம் அருளுள்ளத்தை அலசி யலசி அறைந்தீரே!......ஒருபோதும் சோழர் பிறர்க்குத் துன்ப மிழைத்ததில்லை! முன்னோரின் இரத்தம் ஓடுகிறதா உமது உடம்பில்? (செல்கிறான்)

மாவளத்தான் : (நாணத்துடன்) அமரும்! (எழுந்து கையைப்பற்றி அமர்த்துகிறான்) சீற்றம் கொடியது! அந்தணரின் அருளுடைமையை அகத்திற் கொண்டு வாரும்! இனிச் சூதாடவும் எண்ணு கிலேன். அடி அதிகமோ?

கண்ணன் : அப்படி யொன்றுமில்லை. உள்ளந்தான் சிறிது வலித்தது! (நாணத்துடன்) தங்கள் அன்பு மருந்தால் 'நீர்கிழிய எய்த வடுப்போல' மாறியது. (எழுந்து மாவளத்தான் கையைப் பற்றி) என்னை மன்னிக்க வேண்டும் அரசே!

மாவளத்தான் : (அவனை அமர்த்தி) நான்தானே அடித் தேன்? நீர்தான் மன்னிக்க வேண்டும்!

கண்ணன் : (துக்கத்துடன்) நானே திருட்டாட்டம் ஆடினேன்! ஆட்டத்திலே அவ்வாறு நேர்ந்தால் யாருக்குத்தான் சீற்றம் வராது? (கண்ணீர் ததும்ப) ஆனால், நீரோ, நான் உம்முடைய பிறப்பை இழித்துக் கூறியதை மன்னித்தீர்! நீரே தவறு செய்ததாக வெட்கப்பட்டீர். நீரே அருட் கடல். இழிந்த செயலுடைய நான் இதுவரையில் உம்மைப்போல் அருளாளரை அறிகிலேன். பிறர் பிழை பொறுக்கும் பெருமை சோழர் குடிக் கெளிதெனப் பெரிதும் உணரச் செய்தீர்.

மாவளத்தான் : வீணிற் புகழ வேண்டாம்.

கண்ணன் : இதுவா வீண் புகழ்ச்சி? காற்றை உண வாகக் கொண்டு கொடிய கதிரவன் வெம்மையி லேயும் கடுந்தவம் புரிகின்ற துறவிகளும் வியக் கும்படி ஒரு புறவிற்காகத் தம்முடம்பைத் தராசி லிட்ட தண்ணருளுடையார் சிபி. அவர் மரபா தவறு செய்யும்?

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்"

என்று கூறிய திருவள்ளுவரின் செம்மொழிக்கு நீரே சான்றாயினீர்!

**மாவளத்தான்:** (நாணம் மிக) போதும் புகழ்ந்தது! இனிமேற் சூதாடல் ஏற்றதன்றென எண்ணு கிறேன்.

**கண்ணன்:** ஆம்; நானும் வெறுக்கிறேன். சினத்தை வளர்க்கின்றது! திருட்டுப் புத்தியைச் சேர்க்கிறது! பொறுமை பொருந்துகிறது!......இன்று சில நன்மதிகளை நன்குணர்ந்தேன்.

**மாவளத்தான்:** என்னென்ன?

**கண்ணன்:** முதலாவதாகத் தன்னலத்திற்குப் பிற வுயிர்களின் செந்நீரைச் சிந்துதல் தக்கதன்றென வுணர்ந்தேன். இரண்டாவதாகச் சூதாட்டங் கொடியதெனத் தெளிந்தேன். மூன்றாவதாக...

**மாவளத்தான்:** ஒரே குடியிற் பிறந்தோர் போரிடுவ தால் மாற்றார் வலிமை வளரும் என உணர்ந் தோம்.

**கண்ணன்:** நான்காவதாகச் சோழர்குடிப் பிறந்தோர் மன்னிக்கும் பெருமையுடையார் எனத் தெரிந்து கொண்டேன். (மாவளத்தான் புன்முறுவல் செய் கிறான்)

---

## காட்சி : 3

## முரசு கட்டில்

இடம் : சேரமான் தகடூ ரெறிந்த பெருஞ் சேர லிரும் பொறையின் அரண்மனையில் முரசு கட்டில் மண்டபம்.

காலம் : நடுப் பகல்.

வெற்றி முரசு வைக்கும் பீடத்திலே பல நிறமான மலர்களைப் பரப்பியிருக்கிறார்கள். மோசுகீரனார் என் னும் புலவர் ஒருபுற மிருந்து வருகிறார்.

**மோசுகீரனார் :** (தமக்குத் தாமே) அரசருடன் இன்று அறுசுவை யுண்டி யுண்டேன். இத்தகைய உணவை என்றும் உண்டறியேன். ......உணவு இனி யதா; அன்பு இனியதா என உரைக்க முடியவில்லை. அன்பின் வடிவமான அரசர் வறுமை வடிவமான என்னையும் கூட வைத்து உண்டார். செல்வமும் வறு மையும் ஒன்றாக அமர்ந்து உண்டன. (வியப்புடன்) காணாததைக் கண்டேன். என்னையும் நண்பனாக ஏற்றார் செல்வர். வறியரை நண்பராகச் சேர்ப் பதை இதுவரை கேட்டறியேன். செல்வத் திரு மகள் பித்தளை நகை அணிந்தாள். பொன்மாலை யிலே கல்லைக் கோத்தாயிற்று. (மண்டபத்தைச் சுற்றிப் பார்க்கிறார்.) எல்லாம் செல்வத்தோற்றம். இம்மண்டபத்திலே நிற்கவும் இயலாதவன் நான். ......கண்ணைப்பறிக்குங் காட்சி. வெண்ணிலவாற் சமைத்தனரோ! வெளியிலே கதிரவன் வெம்மை சுடுகிறது. இம்மண்டபத்தினுள்ளே திங்களின் குளிர்ச்சி சேர்ந்திருக்கிறது. (முரசு கட்டிலின் அருகே வருகிறார். உற்றுப் பார்க்கிறார்) இக் கட்டில்

யாருடையதோ? ...... இக்கட்டில் அகப்பட்டேனே......(புன்முறுவலுடன்) இவ்வளவு பெரிய மண்டபம் படுக்கை யறையாகுமா?...... எண்ணெய் நுரையை வாரியிட்டது போல் எவ்வளவு மென்மையான மலர்களைப் பரப்பியிருக்கிறார்கள். (கையால் தொட்டுப் பார்க்கிறார்.) இக் கட்டிலிற் படுத்தால் இன்பமாயிருக்கும். ...... உள்ளமே உன் நிலைக் கேற்றதையே விரும்பு. கந்தைப் பாயில் சிந்தையாரத் தூங்கும் நீ பொன்மயமான இம் மலர்க் கட்டிலைக் கண்ணாலும் பார்க்கலாமா? (உலாவுகிறார்) அரசருடன் அமர்ந்து பொற்கிண்ணங்களிலே அறுசுவை உண்டியை உண்ணவில்லையா? ஏன் இக்கட்டிலிலுந் தூங்கலாகாது?... கையிற் கிடைத்த இன்பத்தைக் கலங்காமல் நுகர வேண்டும். (நடுக்கத்துடன் உட்காருகிறார்) ஆ, எவ்வளவு மேன்மையான கட்டில்! (கொட்டாவி விடுகிறார்) எப்படியானாலும் படுத்துக் கொள்கிறேன். (படுக்கிறார்) என்ன இனிய படுக்கை! (துயில்கிறார். இரு போர் வீரர்கள் ஒரு பக்கம் வருகிறார்கள்.)

**ஒரு வீரன்:** என்ன அண்ணே, இன்னும் முரசு நீராடி வரவில்லை போலிருக்கிறதே!

**மற்றவன்:** ஆம்; நான் கூடக் காலமாயிற்றே எனக் கலங்கி விட்டேன். இருக்கட்டும், புதுக் காதல் வாழ்க்கை எப்படி யிருக்கிறது?

**முதல் வீரன்:** (நாணத்துடன்) உம்......

**இரண்டாம் வீரன்:** என்ன உங்கள் காதல், வாழ்க்கையைக் கரடு முரடாக்குகிறதோ?

முதல் வீரன் : (புன் முறுவலுடன்) அப்படி யொன்று மில்லை......

இரண் : (நகைத்து) ஓ! கூச்சப் படுகிருயோ? ஒன்றும் குறையில்லையே.

முதல் : அப்படி யொன்று மில்லை. எனினும் நல்ல இன்பம் இல்லையே.

இரண் : (வியப்புடன்) ஏன்? இருவர் மனமும் ஒன்று பட வில்லையோ?

முதல் : மன மொத்துத்தான் வாழ்கிறோம். நல்ல முழு நிலவிலே உலாவுவது போல் இனிய வாழ்வுதான்; எனினும், இந்த வேலைதான் இடையூருக இருக் கிறது! செல்வ மிருந்தாற் பிரியாம லிருக்கலாம். வீட்டிற்குச் சென்ருற் காதற் களி நிலவு! இங்கே வந்தாற் பிரிவெனும் பெருங் காட்டுத்தீ. இரு வழியிலும் மாறிமாறிச் செல்வ தெப்படி!

இரண் : என்ன செய்யலாம்? காவல் வேலை கடியது தான்! வயிற்றப் பனுக்கு வழி கூறுவ தெப்படி?

முதல் : (வருத்தத்துடன்) ஆமாம் அண்ணே! நேற்று இங்கே காவலில் இருக்கும்போது உட்கார்ந்த படியே தூங்கிவிட்டேன். ஒரு கனவு கண்டேன். அதுமுதல் வருத்தமாக இருக்கிறது.

இரண் : என்ன கனவு? எதுவாயிருந்தாலும் பகற் கனவு பலிக்குமா என்ன?

முதல் : கனவைத் தெரிந்துகொண்டு பேசு. நானும் அவளுமாக வானத்திலே மிதந்து சென்றேம். எப்படி யென்று தெரியவில்லை. அது ஒரு கடல் போல இருந்தது. இன்பக் கடலென்றுதான் சொல்லவேண்டும். ஓர் ஓடத்தில் செல்வது போல் நினைவு! மிக மகிழ்ச்சியுடன் உலாவினேம்.

எனினும், எங்கிருந்தோ திடீரென்று ஒரு சுரு மீன் வாயைத் திறந்துகொண்டு கொடிய தோற் றத்துடன் வந்தது! அலறி மூர்ச்சையானேன். அவ்வளவுதான்! விழித்துக்கொண்டேன். என் னைப் பிடித்து ஆட்டி என்னடா அலறுகிறாய் என்றாய் நீ! இது ஒரு கெட்ட கனவுதானே?

இரண்: (நகைத்து) நினைவுதானப்பா கனவாயிற்று! அங்கே நனவிலே இன்பம். இங்கே கனவில் இன்பம்! எவ்வாறாலும் இளமையானது இன்பமுடையதுதான்.

முதல்: அந்தச் சுரு மீன் என்ன அண்ணே? அதுவும் நினைவுதானா?

இரண்: ஆமப்பா! ஆமாம். அதுதான் அடிமை வாழ் விலே உண்டாகும் அச்சம்! எங்கே தவறி விடு வோமோ என்ற ஏக்கம்! (கட்டிலின் பக்கம் நோக்குகின்றான்) அது என்ன அங்கே? (இருவரும் கட்டிலின் பக்கம் ஏகுதல்) யாரோ தூங்குகிறானே! இந்தத் துன்பத்திற்கு என்ன செய்வோம்?

முதல்: கொலைத் தண்டனை குறுகியது இவனுக்கு! எழுப்புவோமா?

இரண்: கூடாது! அரசரிடங் கூறுவதுதான் சரி.

முதல்: (நடுக்கத்துடன்) ஏன் படுக்கவிட்டீர்க ளென் றால்?

இரண்: அஞ்சாதே! அரசர் கட்டளையின்படியே சென்றோம். ஆகையால், ஒன்றும் செய்யமாட் டார். ஆனால், நாம் இவனை எழுப்புவதுதான் அரசராணையை மீறுவதாகும்.

முதல்: ஆனால், அப்படியே கூறுவோம். (படுத்திருப் பவரைப் பார்த்து) எங்காவது தெருப்புழுதியிலே

தேடுவாரற்றுத் தூங்கவேண்டியவன் மலரணை யிலே மதிப்போடு தூங்குகிறான்! வெற்றி முரசு வைத்து வீரர் வழிபடுங் கட்டிலிலே இந்தப் பஞ்சை படுத்துத் தூங்குவதா?

**இரண்:** (இரக்கத்துடன்) மீளாத்துயிலுக்கு ஆளா வான் விரைவிலே! அதற்குப் பழகுகிறான் போலும்! வா, போய்க் கூறுவோம். (இருவரும் செல்கிறார்கள். மண்டபத்தின் மற்றொரு பக்கத்திலே சிறிது கழித்து அரசர் வருகிறார். சினத்தால் துடிக் கிறார். பின்னால், இரு வீரர்களும் நடுங்கிக்கொண்டு வருகிறார்கள்.)

**அரசர்:** வெற்றி முரசை வைத்து மணமலர்களால அலங்கரித்துப், பீலியணிந்து வணங்குங் கட்டி லிலே சற்றும் அறிவிலாப் பேதை தூங்குவதா? இதுவரையில் இந்த இழிசெயல் இங்கே எட்டிப் பார்க்கவில்லை. வாளால் இரு துண்டமாக்க வலிய இழுத்துவந்தது ஊழ்வினை! (கட்டிலை நெருங்கு கிறார்; உற்றுப் பார்க்கிறார்; சினம் தணிகிறது; இரக்கம் தோன்றுகிறது.) ஆ! என்ன செய்ய நினைத்தேன்! இங்குள்ள வழியறியாப் புலவ ரிவர்!.........எங்கெங் கலந்தனரோ? அயர்ந்து தூங்குகிறார்......இவருக்கு உண்டியளித்த நான் உறங்க இடமும் அமைத்துத் தாராதது ஒரு குறைதானே? தமிழை வழிபடும் நான், தமிழ்ப் புலவரைப் புறக்கணித்தேன்! என்ன மடமை யிது! (கட்டிலின் அருகிலிருந்த கவரியை எடுத்துப் புலவருக்கு வீசுகிறார்.) மலரின் நறு மணத்தை நுகராமல் அம்மலரையே கசக்கி யெறியக் கருதித் துக் கொண்டேன்! (முதல் வீரனைப் பார்த்து)

நீ சென்று முரசு நீராடி வந்தால் வெளி மண்டபத்திலேயே வைக்கச் சொல். (இரண்டாவது வீரன் கையில் கவரியைக் கொடுத்து) இதமாக வீசு. இவர் விழித்துக் கொண்டவுடன் என்னிடம் கூறு. (செல்கிறார்.)

**இரண்டாம் வீரன் :** (வீசிக்கொண்டே) என்ன பேரன்பு தமிழ்ப் புலவரிடம்! (புலவர் விழித்துக் கொள்கிறார்) நன்றாகத் தூங்குங்கள் ஐயா!

**மோசுகீரனார்:** (எழுந்து அமர்ந்து) இனி உறக்கம் வாராது. கொஞ்சம் அயர்ச்சியால் படுத்தேன். ஏன் கவரியால் வீசுகிறீர்? வேண்டாம்! (வீசுவதைத்தடுக்கிறார்) எனக்கா இந்த மதிப்பு? நீர் யார்?

**வீரன்:** நான் இந்தக் கட்டிலைக் காக்கும் வீரரில் ஒருவன்.

**மோசு:** என்ன? இதைக் காக்கும் வீரரா? காவல் ஏன்?

**வீரன்:** இதிலே வெற்றிமுரசை வைத்து வணங்குவது வழக்கம்; அது நீராடப் போயிருக்கிறது.

**மோசு:** எனக்கு அவ் வழக்கந் தெரியாது. தெரியாமலே படுத்துத் தூங்கிவிட்டேன் அது தவறா?

**வீரன்:** பெரிய தவறுதான். (புலவர் திடுக்கிட்டெழுகிறார்) ஆனால், அரசர் மன்னித்து விட்டார்.

**மோசு:** (நடுக்கத்துடன்) தண்டனை யுண்டோ?

**வீரன்:** அஞ்சாதீர்கள். அப்படியே அமருங்கள். வாளால் இரு கூறுக்குவதுதான் தண்டனை!

**மோசு:** (மிகவும் நடுங்கி) அவ்வளவு கொடிய தவறா? அதையும் அரசர் மன்னித்தாரா?

**வீரன்:** நடுங்காமல் அமருங்கள். அப்புறம் கூறுகிறேன். (பக்கத்தில் இருந்த பீடத்தில் புலவரை

அமர்த்துகிறான்) மன்னித்தது மட்டுமன்று! வலி பொருந்திய தமது தோளால் கவரி கொண்டும் வீசினார். சற்று இருங்கள். அரசரிடம் சென்று வருகிறேன். (செல்கிறான்)

**மோசு:** ஆ! என்ன தவறு செய்தேன். நாட்டின் வழக்க மறியாமல் தவறு செய்துவிட்டேனே. (அரசர் வருகிறார்)

**அரசர்:** நன்றாகத் துயின்றீர்களா? (புலவர் எழுந்து கை குவிக்கிறார்) வேண்டாம்; அமருங்கள். (அரசர் மற்றொரு பீடத்தில் அமர்கிறார். புலவரும் அமர்கிறார்.)

**புலவர்:** மன்னிக்க வேண்டும். வழக்கம் அறியேன்.

**அரசர்:** என்ன பிழை செய்தீர்கள் மன்னிக்க?

**மோசு:** முரசுகட்டிலென்று அறியாமல் படுத்துத் தூங்கிவிட்டேன். அதற்குத் தண்டனை வாளால் வீசுவது தானே?

**அரசர்:** (வியப்புடன்) எப்படி அறிந்தீர்கள்?

**மோசு:** இப்போது, நான் விழித்த பிறகு ஒரு வீரர் கூறினார்.

**அரசர்:** (புன்முறுவலுடன்) அவனுக்குத் தெரியாது; அது பொதுவாகக் குற்றமேயானாலும் விலக்கு முண்டு.

**மோசு:** விதிக்கு விலக்கிருக்கலாம். அது எனக்கு எப்படித் தகுதியாகும்? இக் கட்டிலிற் படுக்க ஏற்றவனா நான்!

**அரசர்:** தாங்களே ஏற்றவர்கள்.

**மோசு:** இல்லை! நான் ஒரு வீரனல்லாததால் வாளால் வெட்டாமல் விட்டிருக்கிறீர்கள்.

**அரசர்:** (நகைத்து) என்ன கூறினீர்கள்? இந்த வெற்றி முரசு தங்களைப் போன்ற தமிழ்ப் புலவர்களின்

வாழ்த்தினாலேயே வாழும். மேலும், வெற்றி முரசு எங்கள் புகழை வெளியிடுவதுதானே? அதை விடத் தாங்களே எங்கள் புகழை வெளியிடுவதிலே சிறப்புடையவர்கள். ஆகவே அதை வழிபடுவதை விடத் தங்களை வழிபடுவது சிறப்புடையது.

மோசு: (வியப்புடன்) என்ன தமிழன்பு! தாங்கள் தமிழ்ப் பற்றுடையவர்களென்பதை என்னை வாளால் வீசாமல் விட்டதாலேயே அறியலாம். மேலும் வறுமையைச் செல்வம் வழிபடுவது போலக் கவரி யெடுத்து வீர நெடுந் தோளால் வீசியதை என்னென்பேன்! இவ்வுலகிற் புகழ்ப் பயிரை நட்டவர்க்கே யன்றி மேலுலகில் இடமில்லை யென்பதை விளங்க அறிந்திருக்கவேண்டும். வேறு எதைக் காரண மாகக் கூறலாம்.

அரசர்: புலவர் தலைவரே! புகழ்ச்சி வேண்டாம். தங்களை வாளினால் வீசுவது தமிழையே வீசுவதாகும்! அந்த வாளை எந்த உறையிலே இடுவேன்? தமிழன்றோ வெற்றி வாளுக்கு இருப்பிடம்? அஃதாவது தமிழாலன்றோ என் வெற்றி வளர்கிறது? காக்கப்படுகிறது? ஆகவே, தங்களை இழிவுபடுத்தி என் வாளைக் கறைப்படுத்த மாட்டேன். தங்களுக்குக் கவரி கொண்டு வீசினால், தமிழன்னைக்கு வீசியது போலாகும். அப்பேற்றையே நான் விரும்பி வீசினேன்; புகழுக்காக அன்று.

**மோசு :** தங்கள் பெருந்தன்மையை என்னென்பேன்? இந்த வறியன்பால் என்ன பேரருள் காட்டுகிறீர்கள்!

**அரசர் :** (முகவாட்டத்துடன்) தமிழ்ப்பெருந் தலைவரே! ஒரு வேண்டுகோள். இனி எப்போதுந் தங்களை வறியரென்று சாற்றுதீர்கள். தமிழ்ச் செல்வமில்லையா? தங்களைப் பேணியே நாங்கள் அச்செல்வத்திலே சிறிது பெறுகிறோம்! தமிழ்ப் புலவரை வறியரென்பது தமிழையே வறியது என்பதாய் முடியும். தமிழ் நாடு தமிழுக்கிருப்பிடம். தமிழ் நாட்டின் செல்வமெல்லாம் தமிழின் செல்வமே. ஆகையால், தமிழை வளர்க்குந் தங்களை வறியரென்று கூறுவது தகுமா? எவன் தமிழ்ப்புலவர்களை வறியரென்கிறானோ அவனே என் பகைவன். அவனை என் வாள் இந்தத் தமிழ் நாட்டைவிட்டு இருள்உலகத்திற்குப் போகச்செய்யும். இனியுந் தங்களைத் தாங்கள் வறியரென்றுதீர்கள். அது என் உள்ளத்தைப் பிளக்கின்றது!

**மோசு :** அரசே! இதுவரையிற்பட்ட துன்பங்கள் அவ்வாறு கூறும்படி எளியேனை யிழுத்தது! இனிமேற் கூறமாட்டேன். அறிவு பெற்றேன். (ஒருவன் பட்டாடைகளும் பொற்பணிகளுங் கொண்டு வருகிறான்.)

**அரசர் :** ஐயா! அருள்கூர்ந்து இவற்றை அணிந்து கொள்ளுங்கள். தமிழுக்கே இந்த அணிகலன்களும் ஆடையும். (புலவர் அணிந்துகொள்கிறார். அரசரும் துணைபுரிகிறார்.) இன்றே நன்னாள்.

மோசு : எளியேனுக்கு நன்றியறிதலைத் தெரிவிக்க வாய் எழவில்லை!

அரசர் : அதுதான் என் வேண்டுகோள். இது என் கடமை. ஆகையால், இதைப் புகழாமல் தமிழை வளர்ப்பது தங்கள் கடமை.

மோசு : தங்கள் ஆணைப்படி நடக்கிறேன்.

---

## காட்சி : 4

## "கவரி மான்"

**இடம் :** உறையூர் : குடவாயிற்கோட்டச் சிறைச் சாலை.

**காலம் :** நடுப்பகல்.

[சிறைச்சாலையின் உட்புறத்திற் சேரமான் கணைக்கா லிரும்பொறை சோர்வுடன் சுவரிற் சாய்ந்துகொண்டிருக் கிருர். அவர் கால்கள் விலங்குகளாற் பிணைக்கப்பெற்று ஒரு தூணுடன் இணைக்கப்பெற்றுள்ளன.

சிறைச்சாலையின் வாயிலிலே இரண்டு காவலாளிகள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர். கதவு தாழிட் டுப் பூட்டப்பெற்றுள்ளது. இவர்கள் அவரைப் பார்க்கும் படியும், அவர் இவர்களைப் பார்க்க முடியாதபடியும் உட் கார்ந்துள்ளனர்.]

**சேரமான் :** (தாமே) அந்நாளிலே அரசனாக இருந்து தன் மதிப்புடன் அறுசுவையுண்டியை உண் டேன். அழகுமிக்க அரிவையர்கள் அருகி லமர்ந்து அன்புடன் உண்பித்தனர். இந்நாளிலே உண்ட உணவு பகைவன் அருளாற் கிடைத்தது! பாழுடலைக் காக்கவேண்டுமே யென வெறுப் புடன் உண்டேன்! அப்போது செல்வர் பலர் அருகிலிருந்து உண்ண விரும்பிக் காத்திருந்தனர். இப்போது யார் என்னுடன் உண்பார்கள்? இது சிறைப்பட்டோன் உணவு!

**ஒரு காவலன் :** (மற்றவனிடம்) சிறைப்பட்டவன் சாப் பாட்டைப் பார்த்தாயா? எப்படியானாலும் அர சன் அரசனே! அரசனுண்ணும் உணவு நமக் கேது? வசைப் பேச்சுத்தான் உணவு நமக்கு!

மற்றவன்: "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து", "கிட்டாதாயின் வெட்டென மற" "நிலையிற் பிரியேல்"— என்பவற்றை எப்போதா வது கேட்டிருக்கிறாயா?

முதலாமவன்: எவன் கேட்பான்? எல்லாரும் மக்கள். யாவருக்கும் நா விருக்கிறது. சுவையை விரும்பு வது தப்பா? நாவை அடக்குவது எப்படி?

இரண்டாமவன்: உண்மைதான் அப்பா! என்றாலும், கிடைக்க வேண்டாமா? ஆவலிருக்கிறது அரசு பண்ண?

சேரமான்: (தமக்குத்தாமே) அரசு செய்து என்ன பயன்? அடிமையாய்விட்டேன். சேரநாட் டரசன்! அணியணியாக வானோங்கிய மலைகளை யுடையவன்! மேலைக்கடலிலே மரக்கலம் விடு பவன்!.........எல்லாப் பெருமையும் எரிந்தன! .........வாழ்விலுந் தாழ்விலும் மனங் கலங்காத வனே வீரனும்! அது 'ஏட்டுச் சுரைக்காய்!' துன்பமடைந்தவன் எப்படி நகைப்பான்?

முதல்: (மற்றவனிடம்) உன் புத்திமதியைக் கேட்ப வர்கள் நகைப்பார்கள் அண்ணே! அடித்தாலும் அழமாட்டாய் போலிருக்கிறதே! ஆடாமல் அசையாமல் அரியணையிலே அமர்ந்திருப்பவர்கள் ஆசைப்பட்டதை உண்ணலாம்! அல்லும் பகலும் அரும்பாடுபட்டோர் அரைவயிற்றுக் கஞ்சிக்கு மேல் ஆசைப்படக்கூடாது! ஆண்டவன் படைப் பிலே ஆகுமோ வேற்றுமை இப்படி?

இரண்: வேற்றுமையை விதித்தவர் யார்? அவரவர் செய்த வினைக்கேற்ப அமைந்திருக்கும் இன்பமுந்

துன்பமும்! எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி விடுவதுதான் ஏற்றதோ?

**சேரமான்:** (தாமே) ஏற்றதா இந்நிலை எனக்கு? இப்படி வருமென்று கனவிலுங் கருதவில்லையே! கற்பிற் சிறந்த காதலியின் நிலை எப்படியுள்ளதோ? பகைவன் கையிலகப்பட்டு வருந்தினளோ! (கண்ணீர் கலங்க) காதற் கடலிலே இப்போதுதானே அலைகளைக் கண்டோம்! இந்த இன்பஞ் சொந்தமென எண்ணினேன் இருநாளைக்கு முன்னே. காதற் கடலிலே சென்ற மரக்கலம் கள்ளரிடத்தே அகப்பட்டது! கள்ளரிடமாவது! சுறு மீனாலடியுற்றுச் சுக்கு நூறாய் விட்டது! அடிமைத் தளையிலே பிணிப்புண்டேன். யார் கூறுவார் என் காதலி நிலையை?

**முதல்:** (மற்றவனிடம்) நிலை மாறுவதே யில்லையா? இதோ இந்த அரசன் அருஞ் சிறையில் அகப்பட்டான். நினைத்திருப்பானா இதனை?

**இரன்:** (இரக்கத்துடன்) அரசனாக இருப்பதே ஆகாதப்பா! வானத்திலே ஒளியுடன் வருவான்; வசயிழந்து மண்ணிலே மிதிபடுவான்! மாணிக்க அணிகளைப் பூண்டு அரியணையிலே அமர்ந்திருப்பான்; இவ்வாறு இரும்பினாலும் தளைபூண்டு வலிய சிறையிலே வாடுவான்! மற்றவர்க்கு வராது இக் குற்றம்.

**முதல்:** ஆமாம்! நம்மைப்போல் எப்போதும் ஒரே நிலையில்—வழி வழியாக வயிற்றுக்கெட்டாத நிலையில்—வாழ்வது யாருக்குத்தான் வரும்?

**இரன்:** ஏதோ நீதான் உயர் நிலை பெற ஒரு வழி கண்டுபிடி! ஒருக்காலும் முடியாது. ஏனென்

ருல், உன் உடம்பில் ஓடும் இரத்தம் அடிமைக் குட்டையில் ஊறியதுதானே? நல்ல செல்வரைக் கண்டால் நடுங்கி வாய் பொத்தி நிற்கும் நயந் தானே உன் உடம்பின் ஒவ்வோரணுவுக்கும் உற்ற பழக்கம்? உடம்பிலே ஊறிய இரத்தத்தை ஒட்ட இறைக்க ஒண்ணுமோ! உன் வேலை உன் மத்தன் வேலைதான்!

சேரமான்: (தாமே) உன்மத்தம் பிடித்து விடும்போ லிருக்கிறதே! வானப்பிறை விளங்கும் மலையின் சிகரத்தை மயக்கி யிருட்டிவிட்டதே வல்வினை மேகம்! இருண்டு குமுறுகிறது! எப்பக்கத்திலும் வெளிச்சமேயில்லை......நெஞ்சத்திலிருந்து வடி யும் இரத்தத்தை எப்படித் துடைப்பது? என் துன்பம் என்று விடியுமோ?......அரசவாழ்க்கை அவலமான வாழ்க்கை. குடிகளின் நலத்தைக் காக்குங் கொற்றவன் பகைவன் சிறையிலே வயிற்றைக் காப்பதா? ஊனைக் காக்க உயர் புகழை ஒழிப்பதா? (துன்பத்துடன்) கணைக்காலா! அணுவணுவாக உன் புகழ் அழிந்தாலும் அறி யாய் என்னலாம். ஒரேயடியாக ஒழிகிறதே! சேரர் குடிப்பெருமையைச் சேர்த்து நெருப்பிலே யிட்டுவிட்டாய்! மேலும்சிறையிலிருந்துகொண்டு அந்த நெருப்புக்கு நெய்யை வார்த்துக்கொண்டே யிருக்கிருய்! வேக விடுவையோ முற்றிலும்?......

முதல்: (மற்றவனிடம்) முற்றிலும் உன்கருத்துமோச மானது! இந்த அரசனைப் பார்! இவன் போரிலே தோற்றுச் சிறைப்பட்டான். இவன் வெளியே தப்பிப் போகாமற் சுற்றிலும் சுவரும் கதவும்

பூட்டும் நாமுங் காவலாயிருக்கிறோம். இப்படியிருந்தும், இதிலிருந்து தப்பியோட இவன் விரும்பலாம். விரும்பலாமென்பதென்ன? விரும்புகிறான் என்றே கூறலாம். ஆனால், நீயோ உன்னை நீயே அடிமைத்தளையில் அகப்படுத்திக்கொண்டிருக்கிறாய். உன் அறியாமையே உனக்குச் சிறைக்கூடம்! உன் விடுதலையைத் தடுக்க நீயே முன் வருகிறாய்! வெளியே பிடித்திழுத்தாலும் நீயே உன்னை யிருட்டறையிலே நுழைத்துக் கொள்கிறாய்! உன் கண்கள் வெளிச்சத்தைப் பார்க்கவில்லை. வெளிச்சத்தைப்பற்றிப் பேசினால் விழுந்து விழுந்து நகைக்கிறாய்! நீர்வேட்கையில்லாதவனுக்கு நீராற் பயனென்ன? உயிரில்லாத கட்டைக்கு உணவில் விருப்பம் ஏது? நீர் வேட்கைதானேது?

சேரமான்: (தமக்குத் தாமே) நீர் வேட்கை யுண்டாகிறதே! (எதிரிலிருந்த குவளையைப் பார்க்கிறார்) இந்தக் குவளையினும் நீரில்லை! இனிமேற் பகைவனை யிரக்க வேண்டியதுதான். மானவேட்கைக்கு வழி தேடாமல் விட்டேன்! காதல்வேட்கைக்குக் கருத்துக் கசியாமல் இருக்கின்றேன். (கண்ணீர் ததும்ப) கண்ணின் கருவிழியான காதலி வாழ்விலும் தாழ்விலும் வழியகலேனென்ற மாசற்ற துணைவி—உயிரொன்றும் உடலிரண்டுமாக இருந்த உயிரோவியம்—வாழ்க்கைக்கு வழிகாட்டி நிற்கும் வளரொளி—வீரத்தை வளர்க்கும் சாரநீர்—உள்ள ஓடையிலே மலர்ந்த மலர்க்கொத்து—எவ்வாறு துன்பமுறுகிறாளோ? அதையறிய வழி தேடவில்லையே! (பெருமூச்சுவிடுகிறார்)

......என் காதலியையும் அரசையும் மானத்தையும் பெறவாவது உயிர் வாழவேண்டும்.

**இரண்டாமவன் :** (முதல்வனிடம்) உயிரில்லாத கட்டையென்கிறாய் நீ! ஊழ்வினையாலேதான் நாம் அடிமையானோம்! மேலும், 'எல்லோரும் பல்லக்கேறினாற் சுமப்பவர் யார்?

**முதல் :** அப்படியானால் நீதான் சுமக்க வேண்டுமோ? உழைத்துழைத்துக் கொடுத்துவிட்டு உயிரைக் காக்க—இந்த அடிமை நிலையை வளர்க்க—இரந்து வாங்கி உண்ணவேண்டுமோ?

**சேரமான் :** (தாமே) இரப்பதா வானத்திலிருந்துவரும் நீரைக் கூட? அதுவும் பகைவனை இரக்க வேண்டுமா? அந்தோ! என்ன காலம்!......இரத்தல் இன்றேல் இறத்தலோ?...பகைவன் மிதித்துக் கலக்கும் இந்த உள்ளத்தின் ஓரத்திலே உண்டாகும் இந்த ஆசை நிறைவேற வேண்டுமானால், உயிர் வாழ வேண்டும்! சிறையிலிருந்து விடுபட்டு இந்தக் கோச்செங்கட் சோழனை ஒருமுறையாவது தோல்வியுறச் செய்து மானத்தைக் காத்துக் கொள்ள வேண்டும். அப்படிக்கின்றி, இப்போ திறந்தால் இழிவுடனேதான் இறக்கவேண்டும். ஆகையால், சிறைக்காவலனை யிரப்போம் (குன்றிய குரலுடன்) காவலா! அடே காவலா.

**முதல்வன் :** (மற்றவனிடம்) பார்த்தாயா அண்ணே! அடே காவலாவாம்! பாரச் சிறையிலே காலில் விலங்குடன் வருந்தினாலும் அரசனென்ற ஆணவம் அகலவில்லை. ஏனென்று கேளாதே.

**இரண் :** அரச குடும்பத்திலே அமைந்தபிறப்பல்லவா? 'கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா? அரசர்கள்

தெய்வப் பிறப்பு! தெய்வமாவது நின்றுகொல்லும். அரசனே அன்றேகொல்லுவான்.

சேரமான் : (சோர்வுடன்) என்ன அப்பா! கூப்பிடுவது காதில் விழவில்லையா?

இரண்டாமவன் : (தனக்குத்தானே) ஐயோ! பாவம்!

முதல் : (மற்றவனிடம்) நம்மை மிதித்துத் துவைத்துக் கொண்டிருக்குங்காலானது சிறிது தளர்ந்தால், அக் காலைத் தள்ளிக்கொண்டு எழுந்தாவது தலை தூக்கிப் பார்க்க நினைவு வேண்டாமா? மிதித்த காலுக்கு மெல்லிய மலரை இட்டு வணங்கும் இந்தக் கோழைத் தன்மை உன்னைவிட்டு எப்படிப் போகும்?

இரண் : நீ என்னென்னவோ சொல்கிறாய் அப்பா! மேலும், இந்த அரசன் என்னசெய்தான் நமக்கு? பாவம்! எப்படியோ சிறைப்பட்டு விட்டான். சிங்கம் சிறையிலிருக்கிறது. மான் அதனைக் காக்கிறது. வாழ்வின் கொடுமை இது.

முதல் : அரச வகுப்பினரெல்லோரும் ஒன்றுதானே? எரியுங் கொள்ளியில் எது நல்ல கொள்ளி? மேலும், மான் சிங்கத்திற்கு இரை. சிங்கம் மானிடத்தில் சிறைப்பட்டால், ஏன் சும்மா விட வேண்டும்? இரக்கமேன் இவனுக்கு?

சேரமான் : (தாமே) இரக்கமில்லையா? மக்களுக்கு வேண்டுவது இரக்கமென்பதே. அந்த மாணிக்கம் இந்தக் காவலர்க்கு ஏனோ கிடைக்கவில்லை? (உரத்த குரலாக) காவற்காரா?

இரண் : (எழுந்து சாளரத்தின் வழியாக) ஏன் ஐயா

சேரமான் : (தலையைச் சற்று அவன் பக்கமாகத்

திருப்பி) எத்தனைக் குரல் கூப்பிட்டேன். இப்போதுதான் இரங்கியதோ உள்ளம்?

முதல்: (எழுந்து) அரசர் பெருமானிடம் நாங்கள் ஏதாவது விண்ணப்பித்துக்கொள்ள வேண்டுமானால் மட்டும் செவ்வி யறியவேண்டும். இப்போதுமட்டும் தங்கள் குறிப்பையறிந்து ஓடிவர வேண்டுமோ? இப்போதுதான் இரக்கந் தெரிகிறதோ? என்ன ஐயா அரச வாழ்க்கையின் செருக்கு.

இரண்: (அவனை அடக்கி) என்ன வேண்டுமெனச் சொல்லுங்கள் இப்போதே கொண்டுவருகிறேன்.

சேரமான்: (பெருமூச்செறிந்து சோர்வுடன்) நாவுலர்ந்து போகிறது. பருகுவதற்குக் கொஞ்சம் நீர் வேண்டும்.

முதல்: வெறுந் தண்ணீர்க்குத்தானு இந்தக்கூப்பாடு? 'குங்குமஞ் சுமந்த கழுதை' போல் உழைத்துழைத்துக் கொடுப்போம் உயர்ந்த பொருள்களை. காலமறிந்து இரந்துண்போம் உப்பிட்ட கஞ்சியை. 'கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை?' என்பீர்களே ஒழிய வாசனை அறிய வழி காட்டமாட்டீர்கள். எவ்வளவோ காலமாக இப்படியே ஆயிரக்கணக்கான எங்களைப் போன்ற ஏழைகளின் உழைப்பாகிய கத்தூரியை எடுத்து மணம் பெற அணிந்தீர்கள். அவர்களுடைய இரத்தத்தைப் பிழிந்து மானமற்ற கோதுகளாக்கிவிட்டீர்கள். இப்படி உயிரைப் பிழிந்த நீங்கள் ஒருபோதாவது இரங்கியதுண்டா?

சேரமான்: (வருத்தத்துடன்) என்ன அப்பா கூறுகிருய்? அரசன் குடிகளின் நன்மையை அன்றி

அறியக் கூடியது ஒன்றுமில்லையே! குடிகள் உடல்; அரசன் உயிர்! மேலும், சிறையிலகப் பட்ட என்னிடம் ஏன் இந்த வாது? உன் அரச னிடம் உரிமை கேட்பதற்கென்ன? என் நாட் டிலே இப்படிக் கூறினவரில்லை!...... (சோர் வுடன்) அந்தோ! பாழும் நீர்வேட்கை என்னைப் பாழாக்குகிறதே.

**இரண் :** (இரக்கத்துடன்) சற்றுப் பொறுத்துக்கொள் ளுங்கள். இதோ போய்க் கொண்டுவருகிறேன். இவன் இன்று காலையில் அரசரிடமிருந்து வசை மொழி வாங்கினான். அதனால், வருத்தத்துடன் உளறுகிறான். (செல்கிறான்)

**சேரமான் :** (துக்கத்துடன்) வளமிகும் பொய்கையிலே மலர்ந்த நறுமண மலரை வலிய விதி கிள்ளி வறண்ட நிலத்திலே எறிந்தது. அதனுடன் விடா மல், முள்ளாலுங் கிழிக்கிறது. கண்ணாற் கூறிச் செவியால் நோக்கும் நான் வாயால் இரந்து வாழ விரும்புகிறேன்.

**முதல் :** (நகைத்து) தங்களின் நிலைமை கெட்டால் இப்படித் தயங்குவது இயற்கையே. அரசனாக இருந்ததை யெண்ணி யெண்ணி அகம் புழுங்கு வதால் ஆவது என்ன? போரிலே வெல்வதே வீரம்; அகப்பட்டுச் சிறைப்படுதல் குறைப்படு தலே; அரைக்காசுக்குப் போன மானம் ஆயிரம் பொன்னளிப்பினும் அகப்படுமா? (இரண்டாம் காவலன் நீர் கொண்டு வருகிறான். கதவைத் திறந்து சென்று குவளையிலே வார்க்கிறான். சேரமான் அதைக் கையிலேந்துகிறான். காவலன் வெளியே வந்து கத வைப் பூட்டுகிறான்.)

சேரமான்: (சோர்வுடன்) காலைக் கழுவவும்போதாத நீர் உயிரையே ஒரு காலத்திற் காப்பாற்றுகிறது. உயிரைத் தரும் இந்தக் குடிநீருக்கு ஓராயிரம் பொன்னும் ஒப்பிக் கொடுக்கலாம்; மயங்கி, நாவுலர்ந்து, நலங்கெட்டுக் கிடக்கும் எனக்கு வலிய உயிரை வழங்குவது இந்த நீர்; இந்த வெறு நீரே இப்போது பகைவராற் சிறைப்பட்டுக் கிடக்கும் எனக்கு மான மற்ற வாழ்வை வழங்குவது;...... இப்போது இந்த நீரைப் பருகுவதால் உயிர் பிழைக்கலாம். ஆனால், நீரிற் குமிழி போன்றது தானே இந்த உடம்பு?......' அரைக்காசுக்குப் போன மானம் ஆயிரம்பொன் கொடுப்பினும் அகப்படாது;' (மனம் உடைந்து நீரைக் கீழே வீசி ஊற்றுகிறான்) சிறைக் காவலனாகிய நண்பா; நீ எனக்கு நல்ல நெறி காட்டினை; தமிழர் வீரர். போரிலே இறந்துபடுவதையே புகழாகக்கொண்டவர். "இறந்து பிறந்த குழந்தையானாலும் ஊன் பிண்டமே பிறந்தாலும் வீரர் உலகத்திற் செல்க வென வாளாற் பிளந்தே அடக்கஞ் செய்வார் தமிழர்; அத்தகைய வீர மரபிலே பிறந்தேன்; பகைவனுடன் செய்த போரிலே வெற்றியடையாவிட்டாலும் உயிரையாவது விட்டிலேன். அது மட்டுமா? பகைவர் என்னைச் சிறைப்படுத்தி நாயைப் பிணிப்பதுபோற் சங்கிலியாற்பிணித்துக் கொண்டு வந்தனர். சிறையிலுமிட்டனர். அத்தகைய பகைவரை யிரந்து—வீரமின்றி வயிற்றுத் தீயைத் தணிக்கக்—கொஞ்சம் நீரையிரந்து உண்ணும் நிலையை விரும்பினேன். இத்தகைய பிண்டத்தை இந்நாட்டிலே எவர்தாம் வீரரு

வார்? இந்நாட்டிற்கே மாசுவிளைக்கும் இவ்வுடல் அழிவதாக. "(உயிர் பிரிகிறது. சிறைக் காவலர் திட்டென அரசர் விழுந்ததை அறிந்து கதவைத் திறந்து உள்ளே வந்து, உயிர் நீங்கிக் கிடப்பதை அறிந்து வியப்பும் நடுக்கமும் கொள்கின்றனர்.)

முதல்: எப்படி அண்ணே உயிர் நீங்கியிருக்கும்? நீர் புரைக்கேறியிருக்குமா?

இரண்: (நீரை ஊற்றியிருப்பதைக்காட்டி) இல்லையப்பா (துக்கத்துடன்) இது 'கவரிமான்.' (இருவரும் கண்ணீர் விடுகின்றனர்)

---

## காட்சி: 5

## பெருநற் கிள்ளி

இடம்: பெருங் கோழி நாய்கன் வீட்டுத் தோட்டம், உறையூர்.

காலம்: மாலை.

(ஒரு மகிழ மரத்தடியிற் போர்வைக் கோப் பெருநற் கிள்ளியும் சாத்தந்தையும் அமர்ந்திருக்கின்றனர்.)

சாத்தந்தை: என்ன பேதைமை, நாமே வீணில் உயிரை விடுதல் நலமா?

பெருநற் கிள்ளி: எண்ணியது கிட்டாதாயின் எதற்கு வாழவேண்டும்? இன்பத்தைத் தேடி ஏகஏக எட்டாமற் போகிறதே அது.

சாத்தந்தை: நினைத்ததை முடிக்கும் ஆற்றலையுடைய நீயே இவ்வாறு கூறினால்?

பெருநற் கிள்ளி: எதை முடித்துவிட்டேன்?

சாத்தந்தை: நேற்று நடந்த மற்போரில் அந்த வலிய மல்லனை மாய்த்ததே போதுமே. ஒருபானை

சோற்றுக்கு ஒரு சோறுதானே பதம்? யாராவது அவனை வெல்ல முடியுமென எதிர் பார்த்தார்களா? உண்மையிலே கூறுகிறேன். பசியோடிருக்குங்களிறு மூங்கிலை முறிப்பது போல் அவனை வாட்டியதைப் பார்க்கும்போது உன் தந்தை நித்தரை நினைத்துக்கொண்டேன்.

**பெருநற் :** (புன்முறுவலுடன்) ஏன்?

**சாத்தந்தை :** நீ அவனைக் கீழே வீழ்த்தி மார்பின்மேல் ஒரு காலை மடித்து வைத்துக்கொண்டு மற்றொரு காலால் அவன் செய்யும்முயற்சியை விலக்கித் தலையுங் காலும் முறிய மோதிக் கொன்றதையும், அதைக்கண்டு மக்களெல்லோரும் செய்த ஆரவாரத்தையும் உன் தந்தை கண்டிருந்தால்—

(களிப்புடன் பெருநற் கிள்ளியை நோக்குகிறான்)

**பெருநற் :** கண்டிருந்தால் என்ன?

**சாத்தந்தை :** உன்னை, உன் அன்னை ஈன்ற காலத்தில் அடைந்த மகிழ்ச்சியைவிடப் பெருமகிழ்ச்சியை அடைவார். அல்லது (நகைக்கிறான்)

**பெருநற் :** அல்லது என்ன?

**சாத்தந்தை :** உன்னைப் பகைத்துக்கொள்ள அஞ்சுவார்?

**பெருநற் :** (நகைத்து) நீ முழுமூட்டாள்? என் தந்தையையோ நான் பகைப்பேன்? நிலவிலிருந்து நெருப்பு உண்டாவதுண்டா?

**சாத்தந்தை :** நான் உன்னைத் தவறாக நினைத்துவிட்டேன். (நகைப்புடன்) மன்னிப்பாய் உன் தந்தை பெரும்பேறு பெற்றார்.

**பெருநற் :** (துக்கத்துடன்) என் வீரத்தை நீயும் புகழ்ந்தாய்; நாடும் புகழ்கிறதென்றாய்? எதன் பொருட்

டுத் தந்தையை மீறி வெளி வந்தேனே, இந்தப் போரிலிறங்கினேனே, அதுமட்டுங் கைகூட வில்லை?

சாத்தந்தை: அந்த மற்போரைப் பார்க்க உன் காதலி யும் வந்திருந்தாளாமே, உண்மையா?

பெருநற்: ஆமாம்? பெண்களிருந்த பக்கத்திலே நோக்கினேன். புன்முறுவலுடன் அவள் நின்று கொண்டிருந்தாள். அந்த முறுவல் என் உள்ளத் திலே பதிந்து பெருக்கத்தை விளைத்தது.

சாத்தந்தை: உண்மையே உரைத்தாய். காதலிகளின் புன்முறுவலையுங் கடைக்கண் பார்வையையுங் கொண்டுதான் வீரர்கள் வெற்றியடைகிறார்கள். பின் ஏன் வாழ்வை வெறுத்தாய்?

பெருநற்: (பெருமூச்செறிந்து) நேற்று மாலை மற் போர் முடிந்தவுடன் அவளைக் காண இங்கே வந் தேன். நாங்கள் சந்திக்குங் காலத்திற்கு முன்பே வந்துவிட்டேன். அவள் வருகையை எதிர் நோக்கி ஒவ்வொரு விநாடியையும் ஒவ்வொரு ஊழியாகக் கழித்தேன். அவளைக் காணு இட மெல்லாம் வெற்றிடமாகவே விளங்கின. அவள் வரும் வேளையும் வந்தது? என் கண்களும் உள்ள மும் அவள் வருகையைப் பார்த்துத் துடித்தன. "என் வீரச்செயலை அவள் வாயாற் கேட்கவேண் டும். அப்போது அவளடைந்த இன்பத்தைக் கேட்கவேண்டும்" என்னும் ஆவலை என்னால் அடக்க முடியவில்லை. இன்னும்—அவள் என் னைப் புறக்கணித்த பின்னும் அந்த ஆவல் என்னை இழுக்கிறதே?

சாத்தந்தை: உம், அப்புறம்?

பெருநற்: அந்த வேளை வந்தது! ஆனால், அவள் வர வில்லை! அப்போது நான் அடைந்த ஏமாற்றத்தை என்னென்பேன்! கடல்நீரைக்கொண்டு பல நிறங்களைக் குழைத்து வானவெளி யெல்லாம் எழுதினாலும் வெளியிட முடியாது! என் உணர்வை யாரோ சிதற அடிப்பது போலிருந்தது! அந்த மல்லன் என்னைப் பலமுறை தாக்கினான். அந்தத் தாக்குதல்கள் தூங்கும் புலியை எழுப்புவதுபோல என் வலிமையைக் கிளறி விட்டன. ஆனால், அவள் வராத அதிர்ச்சி என்னைத் தாக்கியபோது செயலற்றேன்; உணர் விழந்தேன்!......மேலும் காலங் கடந்தது; அவள் வரும் நெறியிலே உள்ள அடிச்சுவடுகள் என்னைப் பார்த்து நகைத்து நகைத்து மறைந்தன. மாலை ஒளி மறைய மறைய என் உள்ள ஒளியும் மறைந்தது. மரங்களிலிருந்த பறவைகளும் அணில்களும் என்னை இரக்கத்துடன் நோக்கிக் கதறியவண்ணம் தம் இருக்கையை அடைந்தன. என் உள்ளக் காதலோவியத்தை யாரோ அழிப்பது போலிருந்தது!

சாத்தந்தை: காதலர்களின் பிரிவே காதலை வளர்ப்பது.

பெருநற்: 'தலைநோயுங் காய்ச்சலுந் தனக்கு வந்தால் மட்டுந் தெரியும்.' ஒருவன் துயரத்தால் துடிக்கும்போது மற்றவன் அதைக் கற்பனைசெய்து காண்கிறான். ஆகையால், ஆறுதல் கூறுவதோடு அமைகிறான்.

சாத்தந்தை: (நகைத்து) உண்மையே! தந்தையின் கருத்தைத் தட்டியதால் எவ்வளவோ அல்லலுற்

றிருக்கிறாய். அறுசுவையுண்டியை அமர்ந்து உண்பது போய்ப் புல்லிய கஞ்சியைப் பருகும் இழிவை அடைந்தாய். 'அரசனாகிய நீ ஆண்டியாகிவிட்டாய்!' இது கற்பனையாற் கண்டு கொள்ள முடியுமா?

**பெருநற்:** உன் கற்பனை பெரியதாய்விட்டது! எளியவர்களோடு பழகுவதால் நான் அடையும் இன்பத்தை நான் பலமுறை கூறியும் மறந்தாய்! எளியவர்களுடன் அவர்களுண்ணும் கஞ்சியையே பருகும் நல்வினை கிடைத்ததற்கு நான் அடையும் மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை.

**சாத்தந்தை:** "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து." ஆகையால், இந்த நிலையைப் புகழாமல் என்ன செய்வது?

**பெருநற்:** அடடா! உன் அறிவு உலக்கைக் கொழுந்துதான்! எளியவரோடு பழகி அவர்களியல்பை அறிகிறேன் இப்போது, ஆயிரக்கணக்கான மக்கள் அரைவயிற்றுக் கஞ்சியுங் கிடைக்காமல் ஒரு பக்கம் துயரம் அடையும்போது, செல்வப் பகாசூரன் ஒருவன் அறுசுவையுண்டியை மறுபிடி நீக்கி மகிழ்வுடன் உண்பது மடமையேயாகும். மேலும், அவ்வறுசுவையுண்டியும் உப்பும் பற்றாத கஞ்சியைப் பருகும் உத்தமர்கள் உதவியதுதானே?

**சாத்தந்தை:** (எண்ணத்துடன்) என்ன அரிய உண்மையை உரைத்தனை அப்பா! (தழுவிக் கொள்கிறான்) ஏழைகளின் தலைவனாகிவிட்டாய்! அங்ஙனமாயின் உன் காதலி உனக்குச் செய்தது உண்மையான பேருதவியேயாகும்.

பெருநற்: (நகைத்து) ஏமாற்றிய உதவிதானே?...... ஆமாம்! (துன்பத்துடன்) காதலென்பது கனவு! வானப்பூ! கானல்நீர்—என்று அறிந்தேன். இதுவே அவள் செய்த உண்மை உதவி!

சாத்தந்தை: (புன்முறுவலுடன்) வீணே குழப்பாதே மனத்தை. இதோபார்! (மடியிலிருந்து சில பனை யோலைகளை எடுத்து ஒன்றைப் பிரித்தெடுக்கிருன்) இதில் எழுதியிருப்பதைப் படிக்கிறேன், கேள். (படிக்கிருன்)

"என் காதலர் அந்த மல்லனோடு போர் செய்யப் போகும்போது என் உயிரே என்னை விட்டுப் போவதுபோலிருந்தது. ஆனால், அவர் சிங்கம்போல நடந்து சென்ற காட்சி என் உள்ளத்திலிருந்த ஒவ்வோரணுவும் வீர நடனமிட்டது போலிருந்தது. அங்கிருந்தவர்களிற் சிலர் இவரே வெற்றியடைவாரென்றனர். அப்போது பொலிவடைந்தேன். சிலர் வெற்றி பெறுவது ஐயமென்றனர். அப்போது, என் நெஞ்சிலே நெருப்பைக் கொட்டியதுபோ லிருந்தது. அவர் வீர நடையை—அம் மல்லனையும் அவையோரையும்பார்த்த எளிமையை—வைத்த கண் வாங்காமற் பார்த்துக்கொண்டிருந்தேன். அவருடைய பார்வை பெண்களிருந்த பக்கந் திரும்பியது. அப்போது அவ்வளவு கூட்டத்திலிருந்தும் எனக்கென்னவோ தனிமையிலிருப்பது போல் நாணமாயிருந்தது. ஒருத்தியின் பின்னல் மறைந்துநின்றேன். எனினும் என் கண்கள் அவர் நோக்குடன் கலந்தன! அப்போது அவர் செய்த புன்முறுவல் இப்போதும் என் உள்ளத்

திலே பதிந்திருக்கிறது. பல்லாயிரக்கணக்கான பெண்களும் ஆடவர்களும் அவரை, "வெற்றி பெறுக" என வாழ்த்தினுர்கள். என் உள்ளமும் வாழ்த்தியது. ஆனுல், வாய் திறக்க மறுத்துவிட்டது. ஆகையால், அவரை எல்லோரையும் போல வாழ்த்தும் வாய்ப்பையும் இழந்தேன்."

**பெருநற்:** (புன்முறுவலுடன்) எதோ அந்த ஓலையை இங்கே கொடு. (வாங்குகிருன்)

சாத்தந்தை: (மற்ருென்றைப் படிக்கிருன்)

"என் காதலர் புல்லரிசிக் கஞ்சியைப் பருகினும் பெருந்தோளராக இருக்கிருர். அவர் அவனுடன் மற்போர் செய்யும்போது நான் என் உயிரோடு போர்செய்து கொண்டிருந்தேன். உள்ளம் படபடத்தது. தெய்வத்தை வேண்டினேன். என் படபடப்பை என்தோழிகள் கண்டு நகைத்தனர். காதலின் ஆற்றலை யறியாத காரிகையரோடு பேசுவதெதற்கு? போர் விரைவாக நடந்தது. இருவருங் கட்டிப் புரண்டனர்; இந்த உலகமே புரளுவதுபோ லிருந்ததெனக்கு. இடையிடையே அவர்கள் செய்தலங்காரம் எனக்கு நடுக்கத்தை யுண்டாக்கியது. என் அருகினிலே இனிய பேச்சுப் பேசிக்கொண்டு விளையாட்டுப் பதுமைபோ லிருந்த அவரா இப்படிப் பயங்கரமாகக் காணப் படுகிருர்? அவையோர் ஆரவாரம் புரிந்தனர். காதலர் அவனை மாட்டைப் புலிவீழ்ப்பதுபோ லிழுத்துக் கீழே தள்ளினுர். அவன் மார்பில் ஒரு காலை மடித்தூன்றினுர். ஆ! என்ன கொடிய காட்சி; அவன் முனங்கினுன்? என்ன நேருமோ என்ற அச்சத்துடன் பார்த்தேன். என் மெய்

சிலிர்த்து நடுங்கியது. அவன் தலையையுங் காலையும் பற்றி மோதினர். அப்பாடா, ஒழிந்தான் அவன். எல்லோரும் ஆரவாரம் செய்து வாழ்த்தினர். நான் என் தோழியைத் தழுவிக்கொண்டேன். அவரைக் கடைக்கண்ணால் நோக்கினேன்.

**பெருநற்:** (மகிழ்ச்சியுடன்) அப்போது அவ்வளவு பேருஞ் செய்த ஆரவாரத்திலும் அவள் மகிழ்ச்சி நோக்கே நல்ல பரிசாக இருந்தது. அதைக் கொடு இங்கே. (வாங்குகிறன்)

**சாத்தந்தை:**—(மற்றொன்றைப் படிக்கிறன்)

"என்னைக்காவலில் வைத்துவிட்டனர். நான் அவரைக் காதலிக்கக் கூடாதாம். அவர் எட்டாப் பழமாம்....ஐயோ. இந்த மாலை நேரத்திலே வந்து எவ்வாறு ஏமாந்து போகிறரோ? என்னே அறிவிலாச் செய்கை. என் உடலைத்தான் காவல் செய்தனர். உள்ளத்தையும் காவல் செய்ய முடியுமோ? பிரிவின் கொடுமையை அறிந்தேன். காதல் நெருப்புப் பிரிவிலேதான் சுடுகிறது. மனமொத்த காதலரைப் பிரிக்கும் வல்வினை கொடிது."

**பெருநற்:** (கண்களில் நீர்ததும்ப) நண்பா. என்ன மடமையேன் யான். அவளடைந்த துன்பத்தை யறியாமல் வருந்தினேன். (அந்த ஓலையையும்வாங்கிக்கொள்கிறன்) ஆமாம். இவை எப்படிக் கிடைத்தன உனக்கு?

**சாத்தந்தை:** நாம் இருவரும் இங்கு வந்தபோது இவற்றை இந்த இடத்திலே பார்த்தேன். நீயோ நினைவுலகிற் சென்றுகொண்டிருந்தாய். என் கண்கள் அவற்றில் ஒன்றில் எழுதியிருந்ததை

ஒருவாறு அறிந்தன. யார் எழுதியிருப்பார்க ளென்பதையும் அறிந்தேன். உனக்குத் தெரியா மல் எடுத்து மடியில் வைத்துக்கொண்டேன். இப்போது, படிக்கும்போதுதான் பொருளையறிந் தேன். நான் இவற்றை உன் கட்டளையின்றி எடுத்ததையும் படித்ததையும் மன்னித்துக் கொள்.

**பெருநற்:** (நகைத்து) நல்லது, என் உயிரைக் கொடுத் ததையும் ஆறுதலளித்ததையும் மன்னிப்ப தெப் படி?

**சாத்தந்தை:** (நகைத்து) நல்ல கற்பனை செய்தாய். (நக்கண்ணை வருகிருள்) அதோ, நக்கண்ணை.

**பெருநற்:** (வியப்புடன்) இப்போது மட்டும் எப்படி வந்தாள்?

**நக்கண்ணை:** (சாத்தந்தையைப் பார்த்து) உங்கள் நண் பருக்கு ஒரு நற்செய்தி! (கடைக்கண்ணுற் பெரு நற் கிள்ளியை நோக்குகிருள்.)

**சாத்தந்தை:** என்ன அது?

**நக்கண்ணை:** அவர் தந்தை அவருடைய வீரச் செய லுக்கு மகிழ்ந்து அவரை அழைத்துக் கொள்ள விழைகிருர்.

**சாத்தந்தை:** (பெருநற்கிள்ளியை மகிழ்வுடன் தழுவிக் கொண்டு) நண்பா! இனி எல்லாம் நலமாகவே முடியும்.

**நக்கண்ணை:** அதைக் கூறவே வந்தேன். குடிகளில் ஒருத்தியாகிய நான் அரசருக்குச் செய்யவேண் டிய பணியைச் செய்துவிட்டேன். இனி இங்கி ருப்பது தகாது. சென்று வருகிறேன். (போகத் திரும்புகிருள்)

பெருநற்: (மடியிலிருந்த ஓலைகளை எடுத்து வீசி) இந்த இதழ்கள் கூறியவையெல்லாம் ஏமாற்றந்தானா?

சாத்தந்தை: (அவற்றை யெடுத்து நக்கண்ணையிடமளித்து) இவை இங்கே கிடந்தன. படித்துப் பார்த்தோம். உன் குறிப்புக்களென எண்ணினோம்.

நக்கண்ணை: (நாணத்துடன் அவைகளைப் பெற்றுக் கொண்டு) பிறருடைய குறிப்பை அவர்களுடைய சம்மதமின்றி யெடுத்துப் படிக்கலாமா? அதுவும் பெண்ணின் குறிப்பை.

சாத்தந்தை: (நகைத்து) படித்தது பிழைதான். தண்டனையை யேற்றுக்கொள்கிறோம்.

பெருநற்: (வெறுப்புடன்) இன்னும் என்ன தண்டனை கொடுக்கப் போகிறாள்?

சாத்தந்தை: இவை இங்கே எப்படி வந்தன?

நக்கண்ணை: காலையில் வந்தேன், இங்கே விட்டு விட்டேன் போலும்! இல்லாத இடமெல்லாந் தேடினேன்! நான் போய் வருகிறேன். (போகத் தொடங்குகிறாள்)

பெருநற்: (சினத்துடன்) அப்படியானால் இந்த இதழ்களிற் கூறியவை உள்ளக் கற்பனை தானே?

நக்கண்ணை: (புன் முறுவலுடன்) அன்று! எப்போதும் தாங்கள் என் காதலரே! ஆனால், இனியும் நான் தங்கள் காதலியாவதெப்படி?

பெருநற்: இனியும் என்றால்?

நக்கண்ணை: நான் ஒரு வேளாளன் மகள். தாங்கள் என்னைக் காதலித்ததாலேயே தங்களை அரசர் வெளியேற்றினார். மறுபடியும் ஏற்றுக்கொள்ளப் போகிறார். தங்கள் தகுதிக்கேற்ற அரசிளங்

குமரி ஒருத்தியை அணிமணம் புரிவிப்பார். (துன்பத்துடன்) நான் அரசியாகத் தக்கவளல்லள். ஆகையால் என் காதலரை—அரசரை என் போன்ற வேளாளராக்க விரும்பேன். மேலும், நேற்று நான் கண்ட வீரப்போரை என் உள்ளம் எண்ணுந்தோறும் அத்தகைய வீரமாதொருத்தியே தங்களுக் கேற்றவளென எண்ணுகிறேன்.

பெருநற்: (வெறுப்புடன்) நண்பா! இவளெண்ணம் இது வாயின் இனி நான் ஒரு துறவியே.

சாத்தந்தை: (நக்கண்ணையைப் பார்த்து) சிறிது நேரத்திற்கு முன்பு நான் இவரைப் பார்க்காவிட்டால் இப்போது பிணமாகவே பார்த்திருப்போம்.

நக்கண்ணை: (நடுக்கத்துடன்) ஏன்?

சாத்தந்தை: நேற்று மாலை உன்னைக் காண முடியாமையால் உள்ளம் உடைந்து தற்கொலை செய்து கொள்ள முயன்றார். ஒருவாறு தேற்றி அழைத்து வந்தேன். பிறகு உன் குறிப்புக்களால் உள்ள மகிழ்ந்தார். ஆனால், எல்லாம் வீணாயிற்று இப்போது.

நக்கண்ணை: (புன்முறுவலுடன்) அரசரான பிறகும் என்னைக் காதலிப்பாரா?

பெருநற்: இது என்ன பிதிர்? இவளுக்காகவே எல்லாவற்றையுந் துறந்தேன் முன்பு. இப்போது மட்டும் வேறாகிவிட்டேனா? அவ்வாறு நிலைமாறுவேன்?

நக்கண்ணை: (நாணத்துடன்) தங்களைச் சோதித்ததற்கு மன்னிக்க வேண்டும். நம் பெற்றோர்கள் நாம் மணஞ் செய்துகொள்ள ஒப்பினர்.

பெருநற் : (களிப்புடன் அவள் கைகளைப் பற்றி) இது உண்மையா? எப்படி நிகழ்ந்தது?

நக்கண்ணை : என் தந்தையே என் வேண்டுகோளால் தங்கள் தந்தையை ஒப்பச் செய்தார்.

சாத்தந்தை : (புன்முறுவலுடன்) இந்த இழிவை எப்படிப் பொறுப்பேன்? நேற்று ஒரு பெரிய மல்லனை வென்றவன் இன்று ஒரு சிறு பெண்ணுக்குத் தோற்றான். நான் சென்று அரசரிடம் கூறுகிறேன். கூறாமலிருப்பதெப்படி? (செல்கிறான். காதலரிருவரும் புன்முறுவல் செய்கின்றனர். மாலைக் கதிரவன் பொற்கதிர்களா லிவரைப் பொன்மயமாக்குகிறான். மகிழமரம் காற்றால் மலர்களைச் சொரிகிறது.)

---

